# இலக்கிய விளக்கம்



டாக்டர் வ. சுப. மாணிக்கம்

மணிவாசகர் நூலகம்
சிதம்பரம்

பதிப்பு : 1972; 1973



விலை, ரூ. 3-00

ஆசிரியரின் பிற நூல்கள்:

1. மனைவியின் உரிமை
2. வள்ளுவம்
3. கொடை விளக்கு
4. தொல்காப்பியப் புதுமை
5. இரட்டைக் காப்பியங்கள்
6. தமிழ்க் காதல்
7. The Tamil Concept of Love
8. உரைநடைத் திருக்குறள்
9. தலைவர்களுக்கு
10. நெல்லிக்கனி
11. எந்தச் சிலம்பு
12. Tamilology
13. நகரத்தார் அறப்பட்டயங்கள்
14. கம்பர்
15. A Study of Tamil Verbs
16. உப்பங்கழி
17. ஒரு நொடியில்

மெட்ரோபாலிடன் பிரிண்டர்ஸ், சென்னை-2

68-2

## முன்னுரை

இலக்கிய விளக்கம் என்ற இந்நூல் பதினன்கு கட்டுரைகள் கொண்டது. செம்பாகம் ஏழு கட்டுரைகள் திருக்குறள் பற்றியவை. நடைமுறையும் செயலும் தெளிவும் நோக்கி எழுதப்பட்டவை. திருக்குறளும் இலக்கியம் ஆதலின் இவ்வேழினையும் இலக்கிய விளக்கமாகவே கருதலாம்.

ஏனைக்கட்டுரைகள் புறம், அகம், காப்பியம், சிற்றிலக்கியம், நீதியிலக்கியம் என்ற நூல்வகைகளை ஒவ்வொரு கூறுபற்றி ஆராய்பவை. இவற்றில் சில இலக்கியப் பாங்குகள் புதுவிளக்கம் பெற்றுள. நீதிவிளக்கம் என்ற இறுதிக் கட்டுரை 'சிறியோர் எல்லாம் சிறியரும் அல்லர்' என்றபடி சிறு நூல்களும் இலக்கியத் திறனுக்கு உரிய ஆய்வுத் தளங்களாம் என்பதை மெய்ப்பிக்கும். இக்கட்டுரைக்கண் 'ஏழிளந்தமிழ்' என்ற ஒரு புதுத் தொகைநூல் படைக்கப்பட்டிருப்பதை நினைவுகொள்ள வேண்டுகிறேன்.

இக்கட்டுரையிற் சில வானொலியில் எழுந்தவை; சில மலரில் மலர்ந்தவை. வெவ்வேறு காலத்தில் எழுதப்பட்டவை எனினும் ஒரு நூல் வடிவம் பெறும் இப்போது வேண்டும் ஒழுங்கு செய்து வெளியிடுகின்றேன். வெவ்வேறு ஆண்டிற் பிறந்த மக்களை ஒருங்கு காணும் குடும்பக் காட்சியின் இன்பம் இந்நூற் காட்சியிலும் தோன்றுகின்றது.

கட்டுரைத் தனிமலர்களை நூன்மாலையாகப் பதிப்பிக்க அன்போடு ஏற்றுக்கொண்ட சிதம்பரம் மணிவாசக நூலகத்தார்க்கு நன்றியன்.

காரைக்குடி
1—12—1971.

வ. சுப. மாணிக்கம்

# பதிப்புரை

மணிவாசகர் நூலகம் டாக்டர் வ. சுப. மாணிக்கம் அவர்களின் நூல்களை வெளியிடுவதில் பெருமகிழ்வு கொள்கின்றது. அவர்தம் 'கம்பர்' என்னும் அரிய ஆய்வு நூலை வெளியிட்டோம். இப்போது 'இலக்கிய விளக்கம்' என்னும் திறனாய்வு நூலினைப் பதிப்பிக்கின்றோம். இந் நூலில் புதிய இலக்கிய நோக்குகளும் புதிய இலக்கியக் கொள்கைகளும் புத்தம் புதுச் சொல்லாட்சிகளும் நிறைந்திருக்கக் காணலாம். தம் நூல்களைத் தொடர்ந்து வெளியிட வாய்ப்பளித்த பேராசிரியர் அவர்கட்கு எங்கள் நன்றி.

எங்கள் நூல்கள் சிறந்த முறையில் வெளிவரத் துணை செய்துவரும் திரு. ச. மெய்யப்பன் எம். ஏ. அவர்களுக்கு நன்றி.

ச. முத்துப்பழநியப்பன்
மணிவாசகர் நூலகம்

## உள்ளுறை


1. இலக்கிய விளக்கம் ... 1
2. இலக்கணக் குறள்கள் ... 14
3. வரிசைப்பாட்டு ... 22
4. வாழ்வாங்கு ... 28
5. தூய இலக்கியம் ... 35
6. நடைமுறை அறங்கள் ... 43
7. இலக்கியக்கலை ... 52
8. குறளணிகள் ... 57
9. இலக்கிய வெள்ளம் ... 64
10. தன் நெஞ்சம் ... 79
11. இலக்கியத்தளம் ... 83
12. குறள் விளக்கம் ? ... 89
13. நம்பிக்கை நூல் ... 95
14. நீதி விளக்கம் ... 100-118

# 1. இலக்கிய விளக்கம்

இலக்கியம் என்பது மனித உள்ளங்களின் திரைப்படம். மனித குலத்தின் ஆசைகளை உணர்ச்சிகளை விளைவுகளை முடிவுகளை இலக்கியத்தில் கற்றுக் கொள்கின்றோம். நல்ல மனிதர்களையும் அவர்களுக்கு இடையூறாக நிற்கும் தீய மனிதர்களையும், அன்பு அறம் பொறுமை போன்ற நல்லுணர்வுகளையும் அவற்றைப் பகைக்கின்ற வன்பு மறம் சிறுமை போன்ற அல்லுணர்வுகளையும் இலக்கியங்கள் வடிக்கின்றன. முழுதும் நல்லவற்றையோ முழுதும் தீயவற்றையோ இலக்கியம் கூறப்புகுவதில்லை. கூறவும் இயலாது. இரண்டும் இடைமடுத்து நடப்பதே இலக்கிய நடை. ஆதலின் பகுத்தறிந்து படிக்கும் ஆற்றலை இலக்கியம் வளர்க்கின்றது. வழக்கில் பல்வேறு மக்களோடு பழகும்போது ஆராய்ந்து விழிப்போடு பழகுகின்றோம். அதுபோலத்தான் இலக்கியத்தை ஆராய்ந்து விழிப்போடு படிக்க வேண்டும். சிலர் தங்கள் வாழ்வில் எப்படி நடக்கின்றனர், அப்படியே இலக்கியத்தையும் பார்க்கின்றனர். எப்படி நடக்க வேண்டும் என்று நினைக்கின்றோம், அதற்குத் தகவும் இலக்கியப் பார்வை செய்யலாம். தற்படி பார்ப்பதற்கும் மேற்படி பார்ப்பதற்கும் இவ்விருவகைக்கும் இலக்கியங்கள் இடங்கொடுக்கும். சரக்குகளைப் பாடஞ் செய்து போற்றுவதுபோல மனித உணர்ச்சிகளை இலக்கியவடிவில் பாடஞ் செய்து வைக்கின்றான் புலவன். விலைமதிப்பில்லா இவ்விலக்கியப் பாடங்களை-உணர்ச்சித் திரட்சிகளை ஒவ்வொருவனும் அறிந்து கொள்வது மனிதப்பேறாகும்.

இலக்கியங்கள் யார்க்கும் பொதுவாக விளங்கிவிடுகின்றன. ஏன்? அவை நம் வாழ்வைப்பற்றிப் பேசுபவை. திருமணம், குடும்ப உறவு, பிள்ளைப்பேறு, குடும்பச்சிக்கல், நட்பு, பகை, அரசாட்சி, போர், வெற்றி, தோல்வி, கலைகள்

இவ்வகையான நடப்புச் செய்திகள் வரும்போது மேலோடாக விளங்கிக் கொள்ளப் பெருமுயற்சி தேவையில்லை. ஓரிரு முறை படித்தாலும் விளங்கிவிடும். படிக்கக் கேட்டாலும் விளங்கிவிடும். பேரிலக்கியங்களைப் புலவர்கள் சொற்பொழியும்போது, கேட்பவர்கள் எழுத்தறிவில்லாதவர்களாயினுங்கூட எவ்வளவோ புரிந்துகொள்கின்றூர்கள். காரணம் கவிதைப்பொருள் அவ்வளவு எளிமையுடையது. இவற்றுள் கதையிலக்கியங்களும் நீதியிலக்கியங்களும் குழந்தைகட்கும் எளிதாகப் புரிந்துவிடுகின்றன. மேலும் இலக்கியங்கள் புரிவதற்கு மற்ருெரு காரணம் புலவன் ஆளும் சொற்கள் பெரும்பாலும் நாம் பேசும் சொற்கள்.

சிற்றில் நற்றூண் பற்றி நின்மகன்
யாண்டுள ஞேவென வினவுதி; என் மகன்
யாண்டுள ஞயினும் அறியேன் ஓரும்;
புலி சேர்ந்து போகிய கல்லளை போல
ஈன்ற வயிற்ரே இதுவே;
தோன்றுவன் மாதோ போர்க்களத் தானே

(புறம் 86)

உன் மகன் எங்கே என்று வினவினள் ஒருத்தி. என் மகன் எங்கிருப்பானே? புலி இருந்து போன குகைபோல இந்த வயிற்றிலிருந்து புறப்பட்டான். புறப்பட்ட நாள் முதல் எப்போதும் போர்க்களத்திலே திரிகின்றுன் என்பது தாயின் மறுமொழி. ஈராயிரம் ஆண்டுகட்கு முற்பட்ட இந்தச் சங்கப் பாட்டில் உள்ள பல சொற்கள் இன்றும் நமக்கு விளங்கக் கூடியனவே. நம் வழக்கில் பயில்வனவே.

வாழ்க்கையைப் பற்றிப் பாடுதலாலும், வழக்குச் சொற்களை ஆளுதலாலும் இலக்கியங்கள் பொதுவாக விளங்குகின்றன என்றுலும் இவ்விளக்கம் ஒரு மேம் போக்கே. ஒரு பெரு நகரத்தினை வானூர்தியிற் பறந்து பார்க்கலாம். விரை பேருந்தியிற் சென்று பார்க்கலாம். மிதிவண்டி செலுத்திப் பார்க்கலாம். மெல்ல நடந்து ஆங்காங்கே தங்கி நின்றும் பார்க்கலாம். இந்த நால்வகைப்

பார்வையுள் ஆற்றுப்படைப்போல நடந்த பார்வையே நகரத்தின் முழுவறிவையும் தரும். காலம் கூடுதல் ஆகும் என்றாலும் இது தருகின்ற பயிலறிவை ஏனைய பார்வைகள் தரமாட்டா.

இலக்கியம் அடிதோறும் சீர்சீராக அசையசையாக முழுதும் விளங்க வேண்டும் எனின், முழு விளக்கத்திற்குச் சில அடிப்படையறிவுகள் தேவை. இவ்வறிவு பெறுவதற்குப் பல இலக்கியங்கள் படிக்க வேண்டுமோ என்று தளர வேண்டிய தில்லை. ஒரு சில இலக்கியங்களைக் கடைப்பிடிகளாக வைத்துக் கொண்டாற்போதும். அச் 'சிலவற்றை முதலில் மேலோட்டமாகப் படித்தபின் ஆழ்போக்காகப் படிப்பது நல்லது. படிக்கும் நூல் சிலவாயினும் கவிதைகளை ஓடாது நின்று பார்த்துத் தங்கிப் படித்தும் செல்லும் அசைநடையால் ஆழ்பொருள்கள் விளங்கித் தோன்றும்.

சங்கப் புலவர்கள் இயற்கையறிவு மிக்கவர்கள். இயற்கையை மக்கள் வாழ்வோடு இணைக்கவல்லவர்கள். பிற்காலப் புலவர்களுக்கும் இயற்கை அறிவு இருந்தது. ஆனால் அந்த அறிவைத் தனியாகப் பாடிப் புனையும் ஆற்றல் இருந்ததேயன்றி மனித சமுதாயத்தோடு ஒன்றிப்பாடும் புலமைய மனம் இல்லை. சங்கப்புலவர்கள் அகம் பாடினாலும், புறம்பாடினாலும் செடி கொடி மரம் பறவை விலங்கு முதலியவற்றின் இயற்கைகளை மனித இயற்கையாக உள்ளுறுத்திப் பாடுவர். ஏதோ தாமரையையும் புன்னையையும் நாரையையும் களிற்றையும் புலியையும் யானையையும் பட்டாங்குப் பாடுகின்றனர் என்று கொண்டு நுனிப்புல்லான ஒரு செய்யுள் என எண்ணிவிடக் கூடாது. வெள்ளியில் நாணயம்போல இயற்கைப் புனைவில் மனிதப் பிணைவு உயிரோடிக் கிடக்கின்றது.

புறநானூறு :

பாண்டியன் நெடுஞ்செழியன் ஆலங்கானப் போரில் தனிவெற்றி பெற்றான். எதிர்த்துவந்த எழுவரையும் முறியடித்தான். இவன் யானைப்படைகள் பகைவர் நாட்டுக்

குளங்களைக் கலக்கிச் சேருக்கிக் குடிநீருக்கு உதவாமற் செய்தன. இவன் படை மறவர்களோ பகைவர் தம் நாட்டுப் பொருள்களை வேண்டுமளவு அள்ளிக் கொண்டதல்லாமல் எஞ்சிய பொருள்களைப் பயன்படாதபடி நிலத்தில் கெடுத்தனர். நகரத்துப் பெருமனைகள் வாழ முடியாதபடி தீக்கிரை ஆகின. இவ்வாறு மிகையாகச் செய்த படு அழிவுகளுக்கு அஞ்சிப் பகைவர்கள் நெடுஞ்செழியனுக்குப் பணிந்து போயினர். வழியிடை அந்த அழிபாடுகளைக் கண்டு கண்டு வரும் புலவர் கல்லாடனார்,

ஆலங் கானத் தமர்கடந் தட்ட
கால முன்பநிற் கண்டனென் வருவல்;
அறுமருப் பெழிற்கலை புலிப்பாற் பட்டெனச்
சிறுமறி தழீஇய தெறிநடை மடப்பிணை
பூளை நீடிய வெருவரு பறந்தலை
வேளை வெண்பூக் கறிக்கும்
ஆளில் அத்தம் ஆகிய காடே

(புறம் 23)

என்று தாம் வந்த காட்டுவழி பற்றிப் பாடுகின்றார். அவ்வழியிற் கண்ட காட்சி என்ன? ஆண்மான் பெண்மான் மான்குட்டி என்ற ஒரு குடும்பம். புலி, ஆண்மானைக் கொல்லவே, உடன் இறக்க நினைத்தும் பெண்மான் இறக்கவில்லை. தன் குட்டியைக் காத்து வளர்க்கும் கடமையொன்று அதற்கு உண்டு. அதனால் குட்டியைத் தழுவிக் கொண்டு முன்போல் சுவையுடைய பசும் புற்களைத் தின்னாது, ஏதோ உயிர் வாழ வேண்டும் என்ற அளவிற்கு ஓரளவு சத்துடைய வேளைப்பூவைத் தின்னுகின்றது. இங்ஙனம் கணவனை இழந்தும் குட்டியைக் காக்க வேளைப் பூவைத் தின்னும் பெண்மானின் இல்லறவொழுக்கத்தைக் கண்டேன் என்று புனைகின்றார் கல்லாடர்.

இப்பெண்மானின் கைம்மைக் காட்சியில் மகளிர் காட்சியை நினைவூட்டுவர் புலவர். ஆலங்கானப்போரில் நெடுஞ்செழியன் எண்ணிறந்த பகைமறவர்களைக் கொன்றழித்

தான். கணவன்மாரை இழந்த பகைமனைவியர் உடனுயிர் துறவாது தத்தம் ஊரில் இருக்கக் கண்டார் புலவர். காரணம் என்னை? குழந்தைக் கடமை. 'சிறுமறி தழீஇய தெறிநடை மடப்பிணை' என்பதனால் காதலன் இறப்பினும் பெற்ற மகவின் பொருட்டு மனைவி பின்னிருந்து கடமையாற்றுவாள் என்பது பிறிது மொழிதல் அணியாகப் பெறப்படும்.

இவ்வொரு புறநானூற்றுக் கருத்து, கணவன் இறந்த பின்னும் மகப்பேறுடைய மனைவியர் சாவாதிருப்பர் என்ற பண்டைச் சமுதாயக் கருத்து பல இலக்கியங்களில் விளக்கம் பெறுகின்றது.

### சிலப்பதிகாரம்-மாதவி:

மாதவி கணிகைக் குலத்திற் பிறந்தவளாயினும் கற்பு நோக்கம் உடையவள். கடற்கரையில் கோவலன் தன்னைப் பிரிந்தபின் பிரிந்து போனால் போகின்றான் என்று வாளா இருக்கவில்லை. தன் கவலை தோன்ற இரு ஓலைகள் வரைந்தாள். அவன் சென்ற இடத்துக்குத் தூது விடுத்தாள். வாழ்நாள் எல்லாம் துன்புற்றும் உடன் சென்ற கண்ணகியைக் 'குலப் பிறப்பாட்டி' என்று மனம் விட்டுப் பாராட்டினாள். 'வடியாக் கிளவி மனக்கொளல் வேண்டும்' என்று தன் பேதைச் சொல்லுக்குக் கழிவிரக்கப்பட்டாள். தான் குற்றம் இல்லாதவள் என்று கோவலன் உணர்ந்து கொண்டால் போதும் என்ற அளவுக்குத் தனி வாழ்வு நடத்தினாள். கோவலன் இறந்தது கேட்டு உடன் இறக்க வேண்டும் என்பதுதான் அவள் கோட்பாடு. ஆனால் தன் மகள் மணிமேகலை நிலை என்னாகும்? சிறு குழந்தையாகிய அவளைக் கணிகையாக்கத் தன் தாய் சித்திராபதி சமயம் பார்த்துக் கொண்டிருக்கின்றாள் என்பது மாதவிக்குத் தெரியும். தன் ஒரு காதலனுக்கு ஒரு மகளாகப் பிறந்த மணிமேகலையைக் கண்ணகி குலமாக்க வேண்டும் என்பது மாதவியின் ஆசை. உடனுயிர் துறப்பதா? மணிமேகலைக்காக

உயிர் வாழ்வதா? என்ற அருநிலையில் பின்னதே கோவல னுக்கும் உவப்பாகும் என்று துணிந்தனள்.

காதலன் உற்ற கடுந்துயர் கேட்டுப்
போதல் செய்யா உயிரொடு நின்றே
பொற்கொடி மூதூர்ப் பொருளுரை யிழந்து
நற்றொடி நங்காய் நாணுத் துறந்தேன்;
காவலன் பேரூர்க் கனையெரி யூட்டிய
மாபெரும் பத்தினி மகள்மணி மேகலை
அருந்தவப் படுத்தல் அல்லது யாவதும்
திருந்தாச் செய்கைத் தீத்தொழிற் படாஅள்

(மணி-2)

என்ற அடிகள் மாதவி வயந்தமாலைக்குக் கூறிய மறுமொழி கள். அந்த ஆண்டு இந்திர விழாவிற்கு நடனமாட மாதவி யும் வரவில்லை; மக்கள் எல்லாம் மிகவும் எதிர்பார்த்த மணிமேகலையும் வரவில்லை என்று வருந்திய தாய் சித்திராபதி செய்தி தெரிந்து வரும்படி வயந்தமாலையை மாதவியிடம் விடுக்கின்றாள். உடனுயிர் துறந்திருந்தால் இந்த ஊர்ப்பழிக்கு இடமிராது. 'மணிமேகலை வருவாள் என்று கூட்டம் எதிர் பார்த்தது பிழை. அவள் கணிகைக் குலத்துப் பிறந்த என் மகள் இல்லை. மதுரைக்குக் கற்புத் தீ வைத்த கண்ணகி மகள். தீய நெறியிற் சிறிதும் அடிவைக்கமாட்டாள்' என்று மாதவி கூறும் மறு மொழியில் காதலனாகிய கோவலனோடு உடன் உயிர் துறக்க விரும்பிய அவள் வேட்கையும், மணி மேகலையைக் கண்ணகி மகளாக்கிக் காக்க அவள் மேற் கொண்ட வாழ்வும் புலப்படுகின்றன. மகளைத் தவத்தி யாக்கும் கடமையுணர்வு மாதவியை வாழவைத்தது.

## சீவகசிந்தாமணி-விசயை:

சீவகசிந்தாமணியில் அரசன் சச்சந்தன் கட்டியங்கார னோடு போரிடப் போவதற்கு முன் கருக்கொண்டிருந்த தன் மனைவி விசயையை மயிலூர்தி யேறிப்போகச் செய் கின்றான். போரில், தான் இறப்பது அவனுக்குத் தெரியும்.

விசயை கண்ட கனவுகளின்படி ஆண் குழந்தை பிறந்து எண்மரை மணந்து அரசாளும் என்பதும் தெரியும். அப் போது பிரிவுக்குக் கலங்கும் விசயை,

நங்கைநீ நடக்கல் வேண்டும்
நன்பொருட்கு; இரங்கல் வேண்டா ;
கங்குல்நீ யன்றுகண்ட கனவெலாம்
விளைந்த தென்ன,
கொங்கலர் கோதை மாழ்கிக்
குழைமுகம் புடைத்து வீழ்ந்து
செங்கயற் கண்ணி வெய்ய
திருமகற்கு அவலஞ் செய்தாள்

(சிந். 267)

என்று திருத்தக்கதேவர் எடுத்துக் காட்டுகின்றார். பிரியாது போரிடும் கணவனோடு உடனிருந்து இறப்பதா? பிரிந்து, உள்ளிருக்கும் மகனுக்காக வாழ்வதா? என்ற இக்கட்டான நிலையில், விசயை என்செய்வது என்று அறியாது வயிற்றில் அடித்துக் கொண்டாளாம். வயிற்றில் அடித்துக் கொண் டாள் என்று பச்சை மொழியிற் கூற மனம் வாராமல் காப்பியத்துக்கு நாயகனாய் உள்ளிருக்கும் திருமகனைத் துன்புறுத்தினாள் என்று காப்பிய அவலம் சுரக்கப் பாடுவர் தேவர்.

கைம்மாண் கடற்படையுள்
காவலனை யாண்டொழியப்
பொய்ம்மா மயிலூர்ந்து
போகிப் புறங்காட்டுள்
விம்மாந் தியான்வீழ
வீழ்ந்தேன் துணையாகி
எம்மானே தோன்றினாய்
என்னை யொளித்தியோ

(சிந். 1801)

சீவகன் இறந்தான் என்று தவருக உணர்ந்தபோது ஒப்பாரிக்கும் விசயை பழைய தன் மனப் போராட்டத்தை நினைவுகூர்ந்து சொல்லும் கருத்துடையது இச் செய்யுள். 'அரச கணவனைப் படை நடுவே விட்டுப் பொறிமயில் ஏறிச் சுடுகாட்டில் இறங்கியதெல்லாம் மகனே நீ துணையாவாய் என்று அல்லவா? இப்போது அரசனும் மயிலும் மறைந்தாற்போல நீயும் மறைந்தனையோ' என்று புலம்புகின்ருள். எனவே கற்புடை நங்கையாம் விசயையின் வாழ்விலும் மகன் பிறப்பு கணவனெடு துறப்பை மாற்றிற்று எனவும் காதலுறவைவிடக் கடமையுறவு பெரிதாயிற்று எனவும் தெளியலாம்.

**சிலப்பதிகாரம் - கண்ணகி :**

கோவலன் இறந்ததும் கண்ணகி உடனுயிர் துறக்கவில்லை என்பது சிந்தனைக்குரியது. மாதவிக்குப் போல மகட்கடமையோ விசயைக்குப்போல மகற்கடமையோ கண்ணகிக்கு இருந்ததில்லையே. கற்புத் தெய்வமான கண்ணகி கோவலன் வீவினைக் கேட்டதும், 'காதலர் இறப்பின் அக்கணமே இன்னுயிர் ஈவர்' என்பதற்கு ஏற்ப, உயிர் விட்டிருக்கலாமே என்று வினவலாம். மக்கட் கடமையை விடக் கண்ணகிக்கு ஒரு பெருங்கடமையிருந்தது. கோவலன் சாவு இயல்பான சாவில்லை. அவன் சாவு 'வீவு' எனப்படும் வீவு என்பதற்கு எதிர்பாராத திடீர் இறப்பு என்பது பொருள். 'காதலன் தன் வீவும் காதலி நீ பட்டதூஉம்' என்பது சிலப்பதிகாரம். கள்வன் என்று குற்றம் சாட்டப்பட்டுக் கொல்லப்பட்டான் கோவலன். ஆதலின் அக்குற்றத்தைத் துடைப்பது கொள்ளப்பட்டாளின் கடமையாகும். கணவனோடு அவளும் விரைந்து உயிர்விட்டிருப்பாளேல் கள்வனுக்குக் கள்ளி உயிர்விட்டாள் என்று தூற்றுவரேயன்றிக் கற்பி என்று புகழார். கோவலன் வீவு கேட்டு உடனே கண்ணகி இறக்க எண்ணவில்லை; கைம்மை நோற்று வாழவும் எண்ணவில்லை. 'என் கணவன் மறைவு இயல்பான மறைவில்லை. இயல்பான மறைவாக இருந்தால்

அல்லவா இயல்பான சமுதாய முறைகளைப் பின்பற்ற முடியும் ?

மன்பதை அலர்தூற்ற மன்னவன் தவறிழைப்ப
அன்பனை இழந்தேன்யான் அவலங்கொண் டழிவலோ
(சிலப். 19)

'நான் அன்பனுகிய கணவனை இழந்த முறை வேறு. இது மன்னவன் முறைக் கேட்டால் வந்த இழவு. ஆதலின் கணவன் போய்விட்டானே என்ற அவலத்தால் சாம்பி மடியேன். தவறுடையான் மன்னவன் ; தவறிலன் என் கணவன் என்று நாட்டும்வரை வாழ்வது என் கடமை' என்று தெளிந்தாள் கண்ணகி. இத்தெளிவோடு கோவலன் கொலைப் பட்ட இடத்தைக் காணச் சென்ருள். கணவன் மார்பைப் பொருந்தத் தழுவினுள். அவன் திருவடியைத் தொழுதாள். கண்ணகி நினைவு அருது கிடந்த கோவலன் ஓராற்ருல் எழுந்திருந்து, 'இருந்தைக்க' என்று ஒருசொற் சொல்லி கடைசி மூச்சினையும் விட்டான். இச்சொல்லின் பெருங் குறிப்பு என்ன ?

வழியிடைப் பெருந்துயரம் எல்லாம் பொறுத்து வந்த கண்ணகி உடனுயிர் துறக்கவல்ல நல்லாள் என்பது கோவல னுக்குத் தெரியும். எங்கே உடலுயிர் துறந்து வருவாளோ என்பது அவனுக்கு ஓர் அச்சம். அவளும் அங்ஙனமாகி விட்டால், வேற்றூராகிய இம்மதுரையில் தான் கள்வன் அல்லன் என்பதை மெய்ப்பிக்க யாருண்டு ? கவுந்தி மாதரி எல்லாம் என்ன நினைப்பர் ? மாசாத்துவான் குடிப்புகழ் என்னும் ? இவ்வாருன பழியெண்ணங்கள் கோவலன் உள்ளத்து ஓடிக்கொண்டிருந்தன போலும். ஆதலின் கண்ணகியைக் கண்டவுடன், என்மேலிட்ட பழியைத் துடைப்பதற்கு இருந்துவா, உடனுயிர் துறவாதே என்று மெய்ப்பாட்டாற் பொருள்பட 'இருந்தைக்க' என்று ஒரு சொற் சொல்லி அமைந்தான். இது கேட்ட பின்னர் மருண்டு சினந்து எழுந்த கண்ணகி,

காய்சினந் தணிந்தன்றிக் கணவனைக் கைகூடேன்
தீவேந்தன் தனைக்கண்டித் திறங்கேட்பல் யான்

(சிலப் 19)

என்று புறப்பட்டாள். கள்வன் என்ற பழியைப் போக்கிய பின்னரே கணவனைக் காண்பது அவன் வரவேற்புக்கு உரியதாகும் என்பது கண்ணகியின் புதுத் தெளிவு.

**மணிமேகலை - கற்பின் நிலைகள் :**

காதலர் இறப்பிற் கனையெரி பொத்தி
ஊதுலைக் குருகின் உயிர்த்தகத் தடங்காது
இன்னுயிர் ஈவர்; ஈயா ராயின்
நன்னீர்ப் பொய்கையின் நளியெரி புகுவர்;
நளியெரி புகாஅ ராயின் அன்பரோடு
உடனுறை வாழ்க்கைக்கு நோற்றுடன் படுவர்

(மணி. 2)

என்ற மணிமேகலைப் பகுதியில் (1) கணவன் இறந்தான் என்றதும் மார்படைப்பால் மனைவி உயிர்விடுதல் உண்டு: (2) தீமூட்டிப் பாய்ந்து உயிர்விடுதல் உண்டு; (3) மறு பிறப்பிலும் அவனை அடையப் பெறுவேனாக என்று கைம்மை நோற்றிருத்தல் உண்டு என்ற மூவகைகளை அறிகின்றோம். உடன் உயிர் விடுதலைத் தலையாய கற்பு எனவும், தீப்பாய்தலை இடையாய கற்பு எனவும், நோற்றிருத்தலைக் கடையாய கற்பு எனவும் கூறிவருகின்றோம். கற்பொழுக்கத்தில் தலை இடை கடை என ஏற்றிறக்கம் கூறுவது பிழையும் ஆகும், நகையும் ஆகும். வள்ளல்களில் தலையாய வள்ளல் இடையாய வள்ளல் கடையாயவள்ளல் என்று சொல்லிவரும் போக்கும் இதுபோன்று நகைப்புக்கு உரியதே.

கணவன் இறந்தபின் மனைவியர் வாழ்நிலை குடும்பக் கடமையைப் பொறுத்தது; கணவன் இறந்த நிலைமையையும் பொறுத்தது. மக்களைக் காக்கும் கடமை இருக்கையில், தாயும் மறைதல் சமூகத்தின் பாரமாகிவிடும். கணவனும் மனைவியும் மக்கள் பெற்றபின் தந்தை தாய் உறவாகக்

குடும்பப் பொறுப்பை ஏற்கின்றனர். அவர்களிடைக் காத லுறவு சுருங்கக் கடமையுணர்வு பெருகுகின்றது. குடும்பக் கடமை சமுதாயக் கடமையாக மாறுகின்றது. ஆதலின் உடனுயிர் விடாதும், தீப்பாயாதும் நோற்றுறையும் கைம் மைப் பேண்டிரைக் கடையாய கற்பினர் என்பது பொருந் தாது, கடமையான கற்பினர் என்று தெளிய வேண்டும்.

ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் அரசு கட்டிலில் மயங்கி வீழ்ந்ததும் கோப்பெருந்தேவியும் ஒருங்குடன் மாய்ந்தாள். இஃது அதிர்ச்சியின் விளைவு. நெடுஞ்செழியன் செங்கோல் தவற்றுக்குத் தேவியும் காரணமாவள். பாண்டியன் மாய அவள் மாயாதிருந்தாளேல் அஃது எவ் வகையிலும் புகழின்பாற்படாது; உடனுயிர்த் துறவே கணவனுக்குப் பெருமை செய்வதாகும்.

மன்னவன் செல்வுழிச் செல்க யானெனத்
தன்னுயிர் கொண்டவன் உயிர்தே டினள்போல்
பெருங்கோப் பெண்டும் ஒருங்குடன் மாய்ந்தனள்
(சிலப். 25)

என்றார் தமிழாசான் சாத்தனார். இத் தேவிக்கு அரசனொடு போவதுதான் கடமை தவிர பின்னிருந்து செய்யக் கூடிய கடமையில்லை, மக்கட்பேறும் இல்லை.

இராமாயணம்:

பிறன்மனை நயந்த இராவணன் இராமனது அம்பால் தன் பெரும் பேறெல்லாம் இழந்து போர்க்களத்தில் வீழ்ந் தான். கணவன் வீழ்ச்சியைக் கேட்டுக் களம் வந்த மண்டோதரி பல்லாற்றால் புலம்பியபின்,

என்ற ழைத்தனள் ஏங்கி யெழுந்தவன்
பொன்ற ழைத்த பொருவரு மார்பினைத்
தன்ற ழைக்கைக ளாற்றழு வித்தினி
நின்ற ழைத்துயிர்த் தாளுயிர் நீங்கினாள்
(யுத்த-இராவ)

என்று தானே உயிர் போயதைச் சுருங்கச் சொல்லினர் கம்பர். மண்டோதரிக்கு மேகநாதன் முதலிய மக்கள் முன்னரே மடிந்து போயினர். இராவணக் கணவனும் மடிவு எய்தியபின், அவளுக்கு என்ன கடமை உண்டு? கணவனை நினைந்து கடைசி மூச்சினை விட்டாள். 'கண்டாள் அவன்தன்னைக் காணக் கடுந்துயரம்' என்று இளங்கோ அவலவுணர்வு சுட்டியதுபோல, மண்டோதரி தனி நின்று அழைத்தாள். இராவணனால் அவள் அழைக்கப் பெறவில்லை, அதனால் உயிர் நீங்கினள் என்று கம்பரும் ஒருபால் நிலையைப் புலப்படுத்துகின்றார். வாலி இறந்தபின் தாரை இறக்கவில்லை. தயரதன் இறந்தபின் வரைந்த தேவியர் மூவர் இருந்தும் யாரும் இறக்கவில்லை. மகன் அங்கதனையும் சுக்கிரீவனுக்குத் துணைநின்று நாட்டின் அரசியலையும் ஒழுங்கு செய்யும் கடமை தாரைக்கு இருந்ததுபோலும். இராமனுக்காகக் கோசலையும், இலக்குவனுக்காகச் சுமித்திரையும், பரதனுக்காகக் கைகேசியும் உயிர் வாழ்ந்திருந்தனர் போலும்.

குறுந்தொகை:

இக்கட்டுரையின் தொடக்கத்துப் புறநானூற்றுப் பாடலில் வந்த பெண்மான் பற்றிய வாழ்க்கையின் விரிவாகப் பல்வேறு இல்லற நங்கையரின் வாழ்வுநிலைகளை இதுவரை கண்டோம். இதன் தொடர்பாக ஒரு குறுந்தொகைப் பாடலில் வரும் பெண்குரங்கின் முடிவுநிலையையும் காண்போம். கடுந்தோட் கரவீரன் பாடிய பாடல்:

> கருங்கண் தாக்கலை பெரும்பிறி துற்றெனக்
> கைம்மை யுய்யாக் காமர் மந்தி
> கல்லா வன்பறழ் கிளைமுதற் சேர்த்தி
> ஓங்குவரை யடுக்கத்துப் பாய்ந்துயிர் செகுக்கும்
> சாரல் நாட நடுநாள்
> வாரல் வாழியோ வருந்துதும் யாமே

(குறுந். 69)

ஆண்குரங்கு இறந்துபட, காதல்மிக்க பெண்குரங்கு கைம்மையாக வாழ விரும்பவில்லை. உடனுயிர் துறக்க எண்ணியது. இதற்குக் கூடஇருக்கும் குரங்குக்குட்டி தடையாயிற்று. பொறுப்பு சிறிது சிந்திக்கச் செய்தது என்றாலும் உயிர் துறக்கும் எண்ணம் மந்திக்கு மேலோங்கிற்று. அதனால் குட்டிக் குரங்கு தன் வயிற்றினின்றும் நீங்கி மரக் கிளையைப் பற்றிக் கொள்ளும்வரை உயிர் வைத்திருந்தது. கிளை பற்றும் வலி வந்தவுடன் பெண்குரங்கு கடுவன் மாய்ந்தது பொறாமல், மலையடுக்கம் ஏறி அங்கிருந்து விழுந்து தன்னுயிரைப் போக்கிக் கொண்டது. இந்த இயற்கைப்புனைவிலிருந்து, கற்புடை நங்கையர் சிலர் கடமை முடியும்வரை உயிர்வைத்திருந்து, அது முடிந்தபின் கணவனுக்காக உயிர்விடுதல் என்ற ஒரு சமுதாய முறையும் இருந்திருக்கலாம் என்று உய்த்துணர்கின்றோம்.

'சிறுமறி தழீஇய தெறிநடை மடப்பிணை' என்ற புறநானூற்றின் ஒருகருத்து பின் எழுந்த தமிழ்க் காப்பியங்களில் பெருகிவளர்ந்த இலக்கிய விரிவை ஒப்பீட்டு முறையில் கண்டு கொள்கின்றோம். பண்டைச் சமுதாய முறை தொடர்ந்து நிலவி வந்த பான்மையினையும் உணர்கின்றோம். இவ்வாறே தொல்காப்பியத்திலும் சங்க இலக்கியத்திலும் வரும் சமுதாய வழக்காறுகள் பின் இலக்கியங்களில் விரிவோ குறுவோ அடைந்த போக்கினை ஆராய்தல் தமிழின வரலாறு காணப் பயன்படும்.

## 2. இலக்கணக் குறள்கள்

திருவள்ளுவர் இலக்கிய முறையில் தம் அறநூலைப் பாடியவர். அம்முறைகள் பல்வேறு திறத்தன. பெருங் காப்பியத்திற் காணப்படும் இலக்கியல்கள், கதை தழுவிய நூலன்றேனும், திருக்குறளில் ஏற்றபெற்றி வந்துள. அதற் குக் காரணம் வள்ளுவரின் புலமை. அணிவகையில் உவமை, உவமைவகைகள், உருவகம், உருவகவகைகள், பின்வருநிலை, இல்பொருள், ஒட்டு, வேற்றுமையணி, ஒப்புமைக்கூட்டம் என்றிவை காணப்படும். நடைவகையில் இயல்பு, வினா, வினாவிடை, ஏவல், வியங்கோள், வியப்பு, உடன்பாடு, எதிர்மறை, மறுப்பு, நிலைக்காட்டு, முன்விதிப்பு, பின்விதிப்பு, உறழ்ச்சி, முற்றுத் தொடர், எச்சத் தொடர், உம்மைத் தொடர், தொடரடுக்கு, துணிவு என்று இன்னவை வந்துள. பொருள் வகையில், இயற்கை, மரம், விலங்கு, வழக்காறு, மேற்கோள், கதை முதலியன அமைந்துள்ளன. உணர்ச்சி, கற்பனை, உரையாடல், தற்கூற்று, யாம்நடை, எண்சுவை முதலான இலக்கியல்களைத் திருக்குறளில் காண் கின்றோம்.

அறிவியல் கலையியல்களுக்கென்று பலதுறைக் கிளவிகள் உள. இக்கிளவிகள் வழக்கில் ஒருபொருளில் வழங்கும். இயலில் வேறு வேறு பொருளில்வரும். ஆதலின் இயலோர் இன்ன குறியீட்டுக்குப் பொருளிது என்று வரையறை கூறிக் கொள்ளல் ஒரு மரபு. அறவியலிலும் ஒழுக்கம் அடக்கம் அழுக்காறு சினம் நடுவுநிலைமை அன்பு அருள் மானம் பண்பு நாணம் சால்பு குடிமை கயமை எனப் பல குறிமொழிகள் உள்ளன. இவற்றில் பெரும்பாலான மக்கள் வழக்கில் நாள்தோறும் பயில்வனவே. பொருள் சொல்ல வேண்டியதில்லை. என்றாலும் ஒருசில அறச்சொற்கள் மிகப்

பொதுவான நிலையில் பயன்படுத்தப்படுகின்றன. பொருள் வரம்பில்லாமல் செல்லுகின்றன. அன்னகிளவிகட்கேனும் தெளிவான பொருள் சுட்ட வேண்டியது நூலாசிரியன் கடமை. இத்தெளிவு அவன் கொள்கைகளை நன்கு அறியத் தேவை.

சங்க இலக்கியங்களில் அறக் கருத்துக்கள் பிறவற்றோடு இடைமடுத்துக் கிடக்கின்றன. அறத்தை முழுதும் சொல்லு கின்ற செய்யுட்கள் புறநானூற்றிற்றான் உள. அதன் அளவு ஒரு விழுக்காடே. மடுத்துச் சொல்லினும் முழுதும் சொல்லி னும் அவையெல்லாம் தனிப்பாடல் நிலையின. இன்றுள்ள தமிழுலகில் முதல் முழுநூல் தொல்காப்பியம்; அடுத்த முழு முதல்நூல் திருக்குறள். அறத்தையே நூற்பொருளாகக் கொண்டு எழுந்த முதல் நூலாதலின், திருக்குறளுக்கு அறம் என்ற பெயர் பண்டு வழங்கலாயிற்று. அகநானூறு, புறநானூறு என்று பொருளால் நூல்கள் பெயர் பெறுவதையும், அகம், புறம் என்று உரையாசிரியர்கள் சுருங்க மொழிவதையும் ஒப்புக் காண்க. 'செய்தி கொன்றோர்க்கு உய்தியில்லென அறம் பாடிற்றே' என்ற புறநானூற்றில் (34) அறம் என்பது திருக்குறளைக் குறிப்பது. பாடிற்று என்ற வினையால் அது செய்யுள் யாப்புடையது என்பது பெறப்படும். வள்ளுவர் சில அறக் குறியீடு களுக்கு வரம்பான தெளிவான பொருளை இலக்கணிப்பதை இனிக் காண்போம்.

## அறத்தின் இலக்கணம்:

1. அறம் என்பது ஒரு பெருந்துறைச்சொல். இதன் ஆட்சி மிகப் பெரிது. எடுத்ததற்கெல்லாம் இது தருமம், இது தருமமில்லை என மனம்போன போக்கில் மக்கள் வழக்கில் தருமப் பேச்சுப் பேசுகின்றனர். யாசகம் கேட்கும் பிச்சைக்காரன் தருமம் போடுங்கள் என்று சுட்டிக் காட்டுகிறான். அறஞ்சாரா நல்குரவு (1047) அறம் நோக் காது ஈட்டிய ஒண்பொருள் (1009) அறங்கூறான் அல்ல செயினும் (181) அறன் ஈனும் இன்பமும் ஈனும் (754)

அறவாழி (8) அறவினை யாதெனின் (321) அறத்தாறு (37) என அறச் சொல்லாட்சி குறளில் மலிந்துள. இதன் வரம்பான பொருள் யாது?

மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்தறன்
ஆகுல நீர பிற (34)

அறன் வலியுறுத்தல் என்ற அதிகாரக்குறள் இது. எத் தன்மைத்து அறம் என்ற வினாவைத் தாமே எழுப்பிக்கொண்டு, தன் மனத்துக்கண் மாசு இல்லாத அந்த அளவே அறம் என்று பட்டென விடைகூறினர் வள்ளுவர். இதற்குக் கட்டுரைபோலப் பல அதிகாரங்கள் எழுதவில்லை. அறம் என்பதன் பொருள் யாரும் எளிதில் உணரக் கூடியதே என்பதனைக் காட்டுவார்போல், 'மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்து (அவ்வளவே) அறன்' என்று ஒரேமூச்சில் முடித்தார். அறமாவது மனம் பற்றியது, மாசில்லாப் பண்பு பற்றியது என இடமும் இடத்து நிகழ் பொருளும் இணைத்துக் காட்டினர், அறத்திலிருந்து தோன்றுகின்ற செயல்கள் பல கூறுகளாக இருக்கலாம்; பல இடங்களில் பரவலாம். ஆனால் அறம் என்ற மூலம் மனம் என்னும் ஓரிடத்து இருப்பது; மாசின்மை என்ற ஒரு தன்மை வாய்ந்தது. குளத்து நீரை ஒருவர் கையால் அள்ளிக் குடிப்பர், ஒருவர் குவளையில் மொண்டு குடிப்பர், ஒருவர் குழாய்வழிக் குடிப்பர், ஒருவர் குளிரகத்து வைத்துக் குளிரக் குடிப்பர், வாய் வைத்துக் குடிப்பர், ஒரு மொடுக்கில் குடித்து விடுவர். குடிமுறை எதுவாக இருந்தாலும், முதற்கண் நீரிடமும் நீரும் தூய்மையாக இருத்தல் வேண்டும். அது போல் அறத்தின் புற வெளிப்பாடுகள் எவ்வண்ணம் இருப்பினும், மூலமனமும் மூலநினைவும் தூய்மையாக வேண்டும். அறமாவது மனத்து மாசின்றிச் செய்கின்ற செயல் என்று நீட்டிச் சொல்லவில்லை. மனத்து மாசில்லாமை என்ற அளவோடு அறத்தின் இலக்கணத்தை முடித்துவிட்டார். ஏன்? ஏதாவது ஒரு செயலின்றி எவனும் வாழ முடியாது. அச்செயலும் பல்வகைப்படும். அறச்செயல்கள் இவை

என்று வரையறுக்க முடியாது. அவற்றில் பழையன கழிதலும் புதியன புகுதலும் ஏற்பட்டுக் கொண்டிருக்கும். ஒரு காலத்து அறச்செயல்கள் இன்னொரு காலத்து வேண்டாதன. சமுதாயத்துக்குக் காலந்தோறும் தேவையான நலச் செயல்களைக் கண்டு அறம் மேற்கொள்ள வேண்டும். ஆதலின் ஒரு நிலைப்படாத அறச்செயல்களைப் பற்றிக் கூறாமல், ஒருவழியான மூக்கைப்பிடிப்பது போல, அறத்தின் தன்மையை மட்டும் வரையறுத்தார் வள்ளுவர். இவ்வரையறை திருக்குறளின் தெளிவுகட்கு மிக இன்றியமையாதது.

மனத்தது மாசாக மாண்டார் நீராடி
மறைந்தொழுகு மாந்தர் பலர் (278)

மழித்தலும் நீட்டலும் வேண்டா உலகம்
பழித்தது ஒழித்து விடின் (280)

மனத்தில் மாசு இருப்ப, எது செய்தாலும் அறமில்லை, வஞ்சகமாம் என்பது இவ்விரு குறள்களின் கருத்து. 'ஆகுல நீர பிற' என்ற குறட்பகுதிக்கு (34) எடுத்துக் காட்டுக்களே மேலை இரு குறள்கள். பிற என்பது மன மாசொடு வஞ்சகமாகச் செய்யப்படுவன. சுருங்கக் கூறின் மனத்தூய்மை அறம். அத்தூய்மை மூலத்திலிருந்து செய்யப்படுவன எல்லாம் அறவினைகள். அறமின்மையாவது மன வஞ்சகம். வஞ்சக மனத்திலிருந்து நல்லன எனச் சமுதாயம் மரபாகக் கருதும் செயல்களை மேற்கொண்டாலும், அவையெல்லாம் பகட்டானவை, படிறுனவை. அறம், அறமின்மை என்பன செயல் பற்றியன அல்ல; மனம் பற்றியனவும் அல்ல; மனத்து நிகழும் தன்மைபற்றியன. இவ்விளக்கத்தைக்கொண்டு,

தவமறைந்து அல்லவை செய்தல் புதல்மறைந்து
வேட்டுவன் புட்சிமிழ்த் தற்று (274)

துறந்தார் படிவத்த ராகி இறந்தாராய்ந்து
என்செயினும் சோர்விலது ஒற்று (586)

என்ற இருகுறளையும் நுனிப்பாம். வஞ்சக நெஞ்சம் காரணமாகத் தவக்கோலம் பழிக்கப்படுகின்றது. அங்ஙனம் பழிக்கும் வள்ளுவர், அரசியல் ஒற்றன் மக்களின் நம்பிக்கைக்கு உரிய தவவேடங்கொண்டு நுழையாத இடமெல்லாம் நுழைந்து நாட்டு நடப்புக்களை ஆராய வேண்டும் என்று சொல்லிக் கொடுப்பர். ஏன்? உளவறிவான் மனத்து நிகழ்வது நாட்டன்பு. அவன் ஒருகால் பிடிபட்டாலும் தண்டனைக்கு உரியவன் அல்லன். மக்கள் நலத்துக்கெனப் பூண்ட மாறுவேடி அவன்.

வாய்மையின் இலக்கணம்:

2. பல அறங்கள் கூறும் வள்ளுவர் வாய்மை என்ற ஓர் அறத்தை மட்டும் யாம் நடையில் வலியுறுத்தி மொழிகுவர்.

யாமெய்யாக் கண்டவற்றுள் இல்லை எனைத்தொன்றும்
வாய்மையின் நல்ல பிற (300)

யாம் கண்டவற்றுள் எனவும், மெய்யாக் கண்டவற்றுள் எனவும் அழுத்தமாக அறைவதிலிருந்து வாய்மையறத்தின் முதன்மை பெறப்படும். அறச்சொல்லுக்கு இலக்கணித்தது போல வாய்மைச் சொல்லுக்கும் அது செய்ய வேண்டும் அல்லவா? வாய்மையாவது நல்லதோ, கெட்டதோ நிகழ்ந்ததை நிகழ்ந்தபடி கூறல் என்பது பொதுவான பொருள். இப்பொருளை ஒரு திருத்தத்தோடு வள்ளுவர் உடன்படுகின்றார். நிகழ்ந்ததைக் கூறவேண்டும் என்பது முற்றும் உடன்பாடு. அங்ஙனம் கூறுங்கால் தீது நீங்கக் கூறவேண்டும் என்பது அவர் திருத்தம்.

வாய்மை எனப்படுவது யாதெனின் யாதொன்றும்
தீமை யிலாத சொலல் (291)

வாய்மை என்பது அறத்துட் சிறந்த தலையறம். நிகழ்ந்தது கூறல் என்ற இலக்கணத்தைக் கொண்டு வாய்மை யறத்தைத் தீய கருவியாகப் பயன்படுத்தக் கூடாது. ஒன்றின்

பயன் பொதுவாக நன்மை, தீமையின்மை, தீமை என்று மூன்று நிலையுடையது. வாய்மைக்கும் இம்முந்நிலை உண்டு. வாய்மை நன்மையாகவே இருக்கவேண்டும் என்பதில்லை. தீமை என்ற மூன்றும் நிலை சாரக் கூடாது. ஆதலின் தீமையில்லாத சொல்ல வேண்டும் என்று முதற்கண்ணே எச்சரிப்பர் வள்ளுவர். நிகழ்ந்தது தீமைதரும் என்பதற் காக மறைக்கலாமா? அது பொய்ம்மை இல்லையா என்ற வினாவுக்கு, 'பொய்ம்மையும் வாய்மையிடத்த' (292) என்று அறவழுவமைதி மொழிவர். நிகழ்ந்ததது கூற வேண்டும்; அது நன்மை பயப்பதாகவும் இருத்தல் வேண்டும்; அது வாய்மை. நிகழ்ந்ததாக இருந்தாலும் பிறர்க்குத் தீமை தருவதாக இருக்குமேல், அப்பகுதியை வெளிப்படுத்தக் கூடாது. அது பொய்ம்மை என்றாலும் பிறர் நலங் கருதிய தூய்மையுடையது ஆதலின் வாய்மை ஆகும். நிகழ்ந்தது என்ற அடிப்படையில் வள்ளுவரின் வாய்மையறம் அமைந்தது. நன்மை பயப்பது வாய்மை; அதற்கு நடந் ததும் கூறலாம், நடவாததும் கூறலாம் என்று பரிமேலழகர் கொள்ளும் கருத்து வழக்குக்குப் பெரிதும் முரண் ஆதலின் கொள்ளத் தகுவதில்லை.

## பழைமையின் இலக்கணம்:

3. நட்புப் பற்றிப் பொருட்பாலில் பல அதிகாரங்கள் உள. மனித சமுதாயம் இடையறுது பிணைந்து வாழும் கூட்டினம் ஆதலின் உறவு பற்றிய பல்வகைகளை அலசிக் காட்டுவர் ஆசிரியர் பழைமை, பேதைமை, வெண்மை என்ற மூன்று குறியீடுகட்குப் பொருள் என்ன? பழைமை-பல் லாண்டுத் தொடர்பு என்பது வழக்குப் பொருள். 'தொல் லைக்கண் நின்ருர் தொடர்பு' எனவும், 'வழிவந்த கேண் மையவர்' எனவும் இத் தொன்மைத் தொடர்பை ஆசிரியர் உடன்படுவர். உடன்படினும் அதன்மேல் ஒன்றை வலி யுறுத்துவர்.

பழைமை எனப்படுவது யாதெனின் யாதும்
கிழமையைக் கீழ்ந்திடா நட்பு (801)

பழைமை என்பது நட்பினுள் ஒருவகை. நண்பர் பழகிய எளிமையால் - வஞ்சகத்தால் அன்று-குற்றம் செய்தால் பொறுத்துக்கொண்டு மறுபடியும் பழகிக் கொண்டிருக்க வேண்டும். 'பழையார்கண் பண்பின் தலைப்பிரியா தார்' எனவும், 'கேண்மையார் கேண்மை விடாஅர்' எனவும் வருதலின் விடா நட்பு பழைமையின் இலக்கணம் என்பது பெறலாம். பழைமை என்ற சொல்லிற்குத் தொன்மைப் பொருளும் உண்டு, பழகுந்தன்மை என்ற பொருளும் உண்டு. 'தொல்லைக்கண் நின்றார்', 'பழகிய நட்பு' என இவ்விரு பொருளிலும் குறளாட்சி காண்க. வாய்மைக்கு நிகழ்ந்ததை உடன்பட்டு நன்மையை வலியுறுத்தியதுபோல, பழைமையில் தொன்மையை உடன்பட்டு என்றும் விடா மையை வலியுறுத்துவர்.

**பேதைமை வெண்மை:**

பேதைமை என்பதொன்று யாதெனின் ஏதங்கொண்டு
ஊதியம் போக விடல் (831)

பேதைமை பெண்ணின் இயல்பு எனவும் யாதும் அறியாமை எனவும் வழக்குப் பொருள் உண்டு. பேதையனும் ஒரு வகை அறிவுடையவனே. அறிவின் வேறுபாடுகளில் பேதைமை ஒன்று. அறிவுடையான் தீது நீக்கி நல்லது கொள்வான். பேதையன் நல்லது நீக்கித் தீது கொள்வான். தூசி வடிகட்டியும் சாறு வடிகட்டியும் உண்டல்லவா?

வெண்மை எனப்படுவது யாதெனின் ஒண்மை
உடையம்யாம் என்னும் செருக்கு (844)

வெண்மை என்பது அறிவு நிலைகளில் ஒன்று. புல்லறிவு என்பது மறு பெயர். வெண்மை (வெள்ளை) என்றால் யாதும் இல்லா வெற்றிடம் என வழக்கில் பொருள் கொள்கின்றோம். அறிவில் தெளிவுநிலை, திரிபுநிலை, பகட்டுநிலை என நிலைபல உண்டு. பித்தன் தவிர ஏனையோர் இந்நிலைகளில் இருப்பர். அறிஞன், பேதையன், வெண்மையன் என அப்படி மனித இனப்பகுப்பு இல்லை. ஒருவனே தெளிவு நிலையில் அறிஞன்

ஆகவும், திரிபு நிலையில் பேதையாகவும், ஆணவ நிலையில் புல்லறிஞனாகவும் மாறிக் கொண்டிருப்பான். எவனிடத்தும் இம்மூன்று நிலையும் இருக்கும். எனினும் ஒருவன் வாழ்வில் பெருங்கூறு நோக்கி அறிஞன் என்றோ பேதையன் என்றோ அறிவிலி என்றோ சொல்லுகின்றோம். வெண்மை என்பது ஓர் அறிவுநிலை. அறிவுத் தெளிவு பெறவேண்டிய இடத்தில் தெளிவுக்குத் தடையான முனைப்பு-செருக்கு-இருக்கின்றது. ஓரிரு வகை அறிந்திருந்தும், சில வகையில் ஓரிரு கூறு அறிந்திருந்தும் எல்லாம் அறிந்தோனாகத் தன்னைத்தானே மதித்துக்கொள்ளும் பகட்டறிவு வெண்மை எனப்படும். அவன் தற்பெருமையை நடையாலும் காட்ட வேண்டி, ஒண்மையுடையன் யான் என்று ஒருமையிற் பாடாது, 'ஒண்மையுடையம் யாம்' என்று உயர்சொன்னடையில் யாத்தார் ஆசிரியர்.

அறம், வாய்மை, பழைமை, பேதைமை, வெண்மை என்ற ஐந்து அறக்கலைச் சொற்களுக்கு ஆசிரியர் இலக்கணித்த பொருளை வழக்கப் பொருளோடு ஒப்பிட்டுப் பார்த்தோம். அந்தணர், முறை, ஈகை, கல்வி, அறிவு, இன்சொல், சொல்வன்மை, திட்பம், தவம், புலவி, காமம், நோக்கம் என்ற கிளவிகட்கும் வள்ளுவர் காட்டும் பொருளொழுங்கு அறியத்தகும். அறச்சொற்கள் எல்லாம் வழக்கில் பயில்வனவே. அவற்றின் பொருளும் மிக வேறுபாடுடையன வல்ல. ஒரு சில அறச்சொற்களுக்குப் பொருள் வரம்பு செய்தாற்போதும் எனக் கண்ட வள்ளுவர் மேற்காட்டியாங்கு அறம் முதலான சொற்களுக்குப் பொருள் இதுவெனத் தெளிவுறுத்தினர். இனைய குறள்களை 'இலக்கணக் குறள்கள்' என்று குறிப்பிடல் நன்மரபு.

# 3. வரிசைப் பாட்டு

பாட்டு என்றால் உணர்ச்சி துள்ள வேண்டும், கற்பனை செறியவேண்டும், உவமை கலக்க வேண்டும், எதுகை மோனை இணைய வேண்டும், நயம் கனிய வேண்டும், நோக்கு இருக்கவேண்டும்; எல்லாவற்றுக்கும் மேலாகச் சங்கப் பாட்டு என்றால், இயற்கை தழுவ வேண்டும். இங்ஙனம் பாட்டுக்கு ஓர் அளவுகோல் செய்து வருகின்றோம்.

பின்வருவது ஓர் உரையாடல்:

சான்றோர்கள் : (பிசிராந்தையாரைப் பார்த்து) உம்முடைய பெயரை நெடும் பல்லாண்டுகளாகக் கேட்டு வருகின்றோமே. நீர் பெரிய கிழவராக இருத்தல் வேண்டுமே. வயது பல ஆகியும் உமக்கு நரை ஏற்படவில்லையே.

பிசிராந்தையார் : (சிரித்துக் கொண்டு) உங்கள் கேள்வி கேட்க வேண்டிய கேள்வி சுருக்கமாகச் சொல்லி விடுகின்றேன். என் மனைவி இல்லறப் பண்பெல் லாம் நிறைந்தவள். எனக்குப் போதுமான ஆண் மக்களும் பெண் மக்களும் உண்டு என் உடன் பிறப்பாளர்கள் என்னோடு ஒற்றுமையாக நடந்து கொள்பவர்கள். என் நாட்டு அரசன் முறை தவறாது குடிகளைக் காப்பவன். என் ஊரில் கல்வி கேள்வி அறிவு பண்பு எல்லாவற்றிலும் சிறந்த பெரியவர் ஒருவர் அல்லர், பலர் இருக்கிறார்கள். எந்நலத்திலும் குறைவில்லாதபோது, நரை எப்படி வரும்?

இந்த மாதிரியான பேச்சு இன்றும் இல்லையா? இப் பேச்சுத் தனிமையில் என்ன பாட்டுமை இருக்க முடியும்?

என்று கருதுகின்றோம். பின்வருவது இவ்வுரையாடல் அமைந்த ஒரு சங்கப் பாட்டு:

யாண்டுபல வாக நரையில வாகுதல்
யாங்கா கியரென வினவுதி ராயின்,
மாண்டவென் மனைவியொடு மக்களும் நிரம்பினர்;
யான்கண் டனையரென் இளையரும்; வேந்தனும்
அல்லவை செய்யான் காக்கும்; அதன்தலை
ஆன்றவிந் தடங்கிய கொள்கைச்
சான்றோர் பலர்யான் வாழும் ஊரே.

(புறம்: 191)

முதற்கண் இச்செய்யுட் பொருளை அலசுவோம். வயது நனி முதிர்ந்தும் முதுமை காட்டும் நரைதிரை தோன்ற வில்லையே என்பது கேள்வி. அதற்கு விடையாக நான்கு கருத்துக்களைப் பிசிரார் சொல்கின்றார். தன் குடும்ப நலம், தன் பொதுக் குடும்ப நலம், தன் ஆட்சி நலம், தன் ஊர் நலம் எல்லாம் யாதும் குறைவில்லை. தொடர்பான இட மெல்லாம் நலம் பயப்பனவாக இருக்கையில் நரைக்கு இடமில்லை.

பிசிரார் மொழிந்த நான்கு நலங்களுள் தன் குடும்ப நலம், தன் பொதுக் குடும்ப நலம் என்ற இரண்டனையும் அகச்சூழ்நிலை எனவும் ஏனைய இரண்டனையும் பொதுச் சூழ் நிலை எனவும் பகுத்துக்கொள்ளலாம். 'இளையர்' என்ப தற்கு ஏவலாளர் என்று இதுகாறும் பொருள் சொல்லப் பட்டு வருகின்றது. மனைவி, மக்கள், வேந்தன், ஊர்ச் சான்றோர் என்போர் இயல்பான தொடர்பினர். விலக்க முடியாத உறவு நிலையினர். இந்நிலையினரோடு எண்ணத் தக்கவர் அல்லர் ஏவலாளர்; விலகற்கும் விலக்கற்கும் உரியர். ஆதலின் 'என் இளையர்' என்பார் உடன் பிறப் பினரே ஆவர். 'மாண்ட என் மனைவி' என்ற நடையை ஒப்பு நோக்குக.

திண்பொருள் எய்தல் ஆகும்;
தெவ்வரைச் செகுக்கல் ஆகும்;
நண்பொடு பெண்டிர் மக்கள்
யாவையும் நண்ணல் ஆகும்;
ஒண்பொரு ளாவ தையா
உடன்பிறப் பாக்க லாகா;
எம்பியை ஈங்குப் பெற்றேன்
என்னெனக் கரிய தென்றான்

(சிந்தா. 1760)

என்பர் திருத்தக்க தேவர். 'நரையில' என்ற தொடர்ப் போக்கு நரை திரை முதலாயின என்பதைக் குறிக்கும். நீ சொன்ன நேரத்தில் வரவில்லையே? என்பது ஒரு மடக்குக் கேள்வி. உடன்பட்டதாக ஒன்றைக்கொண்டு மேலொன்றைச் சொல்லுகின்ற வாய்பாடு உடையது. ஆண்டு பலவாகியும் நரையில்லையே என்பது ஒரு மடக்குக் கேள்வியே. முதுமை வந்தால் நரை வரும். எனக்கு இன்னும் முதுமை தொடரவில்லையே சூழ்நிலைகள் நலமாக இருத்தலால் என் இளமை நீடிக்கின்றது. முதுமையே தொடங்காதபோது நரை என்ற வினவுக்கு இடமில்லை என்பது புலவரின் குறிப்பு.

## பாட்டின் வடிவம்:

'யாண்டு பலவாக' என்பது சங்கச் சான்றோர் கவியினுள் ஒன்று. இதனைப் பாடிய பிசிராந்தையார் அகநானூற்றில் ஒன்று, நற்றிணையில் ஒன்று, புறநானூற்றில் மூன்று என ஐந்து பாட்டாசிரியர். ஏனையப் பாடல்களில் உவமை முதலாயின உள. இப்பாட்டிலோ உவமையில்லை, கற்பனையில்லை, இயற்கையில்லை என்பது வெளிப்படை. இவை இல்லாவிட்டாலும் இது பாட்டாகாதா? சிந்திப்போம். உவமை முதலாயின இல்லாவிட்டாலும் ஒரு செய்யுள் பாட்டாகலாம். ஏன்? உவமை என்றின்னவை பாட்டின் புறக்கூறுகள். எண்ணிய கருத்தை ஒழுங்குபடப்

புனையும் அமைப்பே பாட்டின் வடிவம். புறக்கூறுகள் இன்றியும் வடிவச்செம்மை வரும். கண்ணகி கற்பழகி; அணிகலன்கள் அவளுக்கு இயல்பாக வேண்டுவதில்லை. அவளழகு செய்யாக்கோலம். ஆதலின்,

கூடல் மகளிர் கோலங் கொள்ளும்
ஆடகப் பைம்பூண் அருவிலை யழிப்பச்
செய்யாக் கோலமொடு வந்தீர் (சிலப். 16)

என்று மாதரி கண்ணகியின் அணியில் திருமேனியைப் பாராட்டுகின்றாள். சீதை இயற்கைப் பேரழகி; மேலணிகள் அவளழகை மிகுக்கவில்லை. மாறாக மறைக்கின்றன என்று கருத்துக்கொண்ட கம்பர்,

அமிழிமைத் துணைகள் கண்ணுக்கு
அணியென அமைக்கு மாபோல்
உமிழ்சுடர்க் கலன்கள் நங்கை
உருவினை மறைப்பது ஓரார்
அமிழ்தினைச் சுவைசெய் தென்ன
அழகினுக்கு அழகு செய்தார்
இமிழ்திரைப் பரவை ஞாலம்
ஏழைமை யுடைத்து மாதோ
(பால: கோல.)

எனச் சீதைக்கு அணியழகு செய்வாரை அறியாதவர் என்று சாடுகின்றார். இயற்கை யழகு என்பது பாட்டுக்கும் பொருந்தும். வடிவொழுங்கு பட்டாங்கு இருப்பின், உவமை முதலாயின வேண்டுவதில்லை. இவ்வொழுங்கு இல்லாத பாட்டு, புடைவைக் கடைப் பார்வைப் பாவை போல என்ன செய்யழகு செய்தாலும் உயிர்ப்பு இராது.

**வரிசையழகு:**

'யாண்டு பலவாக' என்ற பாட்டில் கருத்தொழுங்கு உண்டு. கருத்தைச் சொல்வதில் வரிசையுண்டு. 'வரிசை அறிதலோ அரிதே' என்பர் கபிலர்.

''மாண்டஎன் மனைவியொடு மக்களும் நிரம்பினர்
யான்கண் டனையர் என் இளையரும்''

ஒருவனுக்கு மனைவியும் மக்களும் முதல் நெருக்கமானவர். உடன்பிறந்தார் அடுத்து நெருக்கம் ஆனவர். வேந்தனும் ஊர்ச்சான்றோரும் அடுத்தடுத்த நெருக்கத்தினர். முன்ன வர் இருவரும் ஒருவனுக்கு நேரடித் தொடர்பினர். அவர் தம் நலமும் தீங்கும் ஒருவரை விரைவில் சாரும். வேந்தனும் சான்றோரும் பொதுத் தொடர்பினர். அவர் தம் செயல்கள் பலரைச் சார்வன. இங்கு முறை வைப்பில் நினைக்கத்தக்க ஒன்று உண்டு. தன் ஊர்ச்சான்றோரை மூன்றாவதாக வைத்து எல்லார்க்கும் பொதுவான வேந் தனை நான்காவதாக இறுதியில் வைத்திருக்க வேண்டும். மனைவி, மக்கள், உடன் பிறந்தார், வேந்தன் என்றிவ் வகையினர் நன்மைக்கும் தீமைக்கும் இடமானவர்: சான் றோர் நலமே செய்பவர் ஆதலின் முறை மாறிவைத்த முறை பெறப்படும். 'வேந்தனும் அல்லவை செய்யான் காக்கும்' என்று எதிர் மறுத்து மொழிவதாலும், 'ஆன்றவிந்து அடங்கிய கொள்கைச் சான்றோர்' என்ற விளக்கத்தாலும் வரிசைக் கருத்துத் தெளிவாகும். சான்றோர் என்பதற்கு வீரர் என்ற பொருளும் உண்டு. அச்சான்றோரைச் சுட்ட வில்லை என்று காட்ட 'ஆன்று அவிந்து அடங்கிய கொள்கைச் சான்றோர்' என்று பொருள் விரித்தார் பிசிரார். எனவே நரையில்லையே என்ற வினவிற்குக் காரணம் மொழி யும் போது, நான்கு தொடர்புகளை-வாழ்க்கைச் சூழ்நிலை களை-நெருக்களவில் வரிசைப்படுத்திய வடிவு பாட்டின் வடி வாகும். உவமைப்பாட்டு, கற்பனைப்பாட்டு, உணர்ச்சிப் பாட்டு என்பதுபோல வரிசைப் பாட்டும் ஒரு செய்யுள் முறை.

அஞ்செஞ் சீறடி அணிசிலம்பு ஒழிய
மென்துகில் அல்குல் மேகலை நீங்கக்
கொங்கை முன்றில் குங்குமம் எழுதாள்
மங்கல வணியிற் பிறிதணி மகிழாள்

கொடுங்குழை துறந்து வடிந்துவீழ் காதினள்
திங்கள் வாண்முகம் சிறுவியர் பிரியச்
செங்கயல் நெடுங்கண் அஞ்சனம் மறப்பப்
பவள வாணுதல் திலகம் இழப்பத்
தவள வாணகை கோவலன இழப்ப
மையிருங் கூந்தல் நெய்யணி மறப்பக்
கையறு நெஞ்சத்துக் கண்ணகி (சிலம். 4)

என்பது அவலவுணர்ச்சியில் எழுந்த வரிசையடிகள். கோவலன் பிரிந்தபோது, கண்ணகி தன்னைச் சிறிதும் அழகுபடுத்திக் கொள்ளவில்லை என்பதனை அடிமுதல் கூந்தல் முடிவரை உறுப்புக்களை ஒரு வரிசைக்கு உட்படுத்திப் புனைகிறார் இளங்கோ.

பாட்டின் வடிவம் பகுதிப் பொருள்களை
நாட்டும் வரிசையில் நடந்திய லும்மே

செய்யுள் உள்ளமைப்பு, இல்லமைப்பு என இருவகை யுடையது. ஒரு பொருளினைப் புனைந்து விளக்குங்கால், இன்ன கருத்து வரலாம் என்பது ஒரு முறை; இன்னது வரக்கூடாது என்பது ஒருமுறை. தம் நீண்ட இளமைக் குக் காரணம் கூறுவார், மனைவி மக்கள் உடன்பிறந்தார் வேந்தன் சான்றோர் இனையவரின் நிறைவையும் ஒற்று மையையும் செம்மையையும் சால்பையும் கூறினர். தன் நல்ல பழக்க வழக்கங்கள் காரணம் என்று சொல்லி யிருக்கலாம்; தன் கல்வியறிவு ஒழுக்கம் காரணம் என்று சொல்லியிருக்கலாம்; நால்வரோடு தன்னை யுளப்படுத்தி 'வாழ்வாங்கு வாழும் மாசில் வாழ்க்கையன்' என்று முதலிலோ இறுதியிலோ மொழிந்திருக்கலாம். இவ்வாறு தன்னைப்பற்றிக் கூறு இல்லமைப்பால் பிசிராந்தையாரின் மனவொழுங்கையும், அவர் ஆன்றவிந்து அடங்கிய கொள்கைச் சான்றோருள் ஒருவர் என்பதனையும் உணர்ந்து கொள்கின்றோம்.

# 4. வாழ்வாங்கு

'வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன்' என்று ஒரு திறக்குறள் தொடங்குகிறது. ஏனைக் குறள் எல்லாம் இக்குறளின் விளக்கம் என்று சொல்லலாம். இக் குறளில் 'வாழ்வாங்கு' என்று ஒரு புதிய சொற்சேர்க்கை செய்வர் வள்ளுவர். வாழ்வாங்கு வாழ்பவன் என்பதற்கு வாழும் முறைப்படி வாழ்பவன் என்பது பொருள். வாழ்வுக்கு ஒரு முறையுண்டு. உயிரோடிருப்பினும், அம்முறை தழுவி ஒழுகும்போதுதான் வாழ்வு எனப்படும். 'பொய்யனேன் நான் உண்டு உடுத்து இங்கு இருப்பதானேன்' எனவும் 'ஊனுர் புழுக்கூடு இது காத்து இங்கிருப்பதானேன்' எனவும் மணிவாசகர் வெற்றிருப்பை இகழ்வர். எப்படியேனும் காலங் கழிக்க எண்ணுவது வாழ்வு ஆகாது. ஒருவன் சாகாதிருப்பதனுல் அவன் வாழ்கின்ருன் என்று சொல்லிவிடலாமா? சாதலும் சிலருக்கு வாழ்வு தரும். மானத்தைக் காக்க வேண்டும் என்ற நிலைபற்றி அறம் சொல்லும் போதெல்லாம் உயிரை ஓர் ஈனப் பொருளாக அவமதிக்க வேண்டும் என்பர் வள்ளுவர். உயிர் தானே போகாவிட்டால், வலிந்தாவது போக்கிக் கொள்ளலாமே என்பர். 'உயிர் நீப்பர் மானம் வரின்' என்ற தொடரில் நீப்பர் என்ற பிறவினை-வல்வினை ஆட்சியைக் காண்க.

பெருமை பெருஞ் சிறுமைப்பட்ட போது உடலைப் பேணிக்கொண்டு உலகை விடாதிருத்தல் ஒரு வாழ்வா? மதியாதாரின் பின் சென்று அடிமையாக வாழ்வதைக் காட்டிலும் உயிர் விட்டொழிதல் நன்றல்லவா? இவ்வாறு வாழ்வுக்கு மானமருந்து தருவர் வள்ளுவர். இதன் குறிப்பு என்ன? இறக்க வேண்டும் அல்லது இறப்பித்துக் கொள்ள வேண்டும் என்பதுவா இப் பேராசான் கருத்து? மனிதப்

பிறப்பு பெறுமவற்றுள் அரிய பிறப்பு என்று பாராட்டிய வள்ளுவப் பெருமகன், அரிய உடம்பைப் பெற்றவன் அளவறிந்து உண்டு ஓம்பி நெடிது வாழ்க என்று வாழ்த்திய அப்பெருமான், நாம் இறக்கவும் மடியவும் மாளவுமா தெய்வக் குறள்கள் எழுதினர்? நாமெல்லாம் இவ்வுலகில் வாழ்வாங்கு வாழவேண்டும், பின்னர் வானுறையும் தெய்வங் களாக வழிவழி மக்களால் போற்றப்பட வேண்டும் என்பதுவே அவர் நன்னெஞ்சம்.

வள்ளுவங்கள் :

வாழ்வுக்கு முறை இன்றியமையாதது என்றால், அம் முறை என்பது என்னே? முறை ஒன்றா? பலவா? ஆளுக்கு ஒரு முறையா? பலருக்குப் பன்முறையா? திருக்குறள் கூறும் வள்ளுவம் ஒன்றன்று, பலவினும் பல. மக்கள் மனிதப் பிறப்பு என்ற இன வகையில் ஒன்றாக இருந்தாலும் பண்பால் நினைவால் அறிவால் ஆசையால் கல்வியால் பொருளால் முயற்சியால் உறவால் நட்பால் பகையால் பருவத்தால் உருவத்தால் உடற்கூற்றால் இன்னும் எத்துணையோ பிரிவால் வேற்றுமைப் பட்டவர்கள். இவ் வேற்றுமையை என்றுமுள வேற்றுமையாகக் கொண்டு வள்ளுவங்கள் கூறுவது திருக்குறள். சுருங்கச் சொல்லின், முறைகளின் தொகுதியே திறக்குறள். ஒருவனுக்கே அவன் பல நிலைகளுக்கு ஏற்பப் பன்னெறிகள் மொழிவது திருக் குறள். மனித வாழ்வில் பல நிலைகள் உண்டு என்று கண்டு உணர்ந்து அவற்றுக்கெல்லாம் பலவழிகள் காட்டிய சிறப்பே குறளின் சிறப்பு. இவ்வடிப்படையைக் கடைப்பிடித்துத் திருக்குறளைக் கற்கமுனைபவர் ஒவ்வொரு தனி மனிதனுக்கும் உரிய தனி வள்ளுவங்கள் எத்துணையோ உண்டு என்று புரிந்து தேர்ந்து எடுத்துக் கொள்ளமுடியும்.

பொருள் வாழ்வு :

திருக்குறள் காட்டும் பல்வேறு நிலைகளை மூன்று பெரும் பிரிவாக்கலாம். யார்க்கும் இல்வுலகில் பொருள் வேண்டும் ;

யாவர்க்கும் அறிவு வேண்டும் ; எவர்க்கும் பண்பு வேண்டும். இம்மூன்றில் பொருள் பற்றிய முறைகளை விரிவாகப் பார்ப்போம்.

மனிதன் பிற உயிரினங்கள் போல இயற்கையோடு நெருங்கி இயைந்து வாழ்பவன் இல்லை. இயற்கை யொட்டி இல்லை. இயற்கை விலகியாக வளர்ந்து கொண்டே அகல்கின்றான். செயற்கை மயமே நாகரிக வளர்ச்சியாகக் கருதப்படுகின்றது. செயற்கை பெருகப் பெருகச் சமுதாயக் கூட்டுறவு பெருகல்வேண்டும். நன்கு வாழவிரும்பும் மாந்தன் இக் கூட்டுறவைப் பெருக்கிக் கொள்ளல் வேண்டும். இக் கூட்டுறவு எதனால் எளிதில் உண்டாகும் ? பொருளால் உண்டாகும் என்று கண்டவர் வள்ளுவர்.

ஆகாது எனினும் அகத்துநெய் உண்டாயின்
போகாது எறும்பும் புறஞ்சுற்றும்

(நாலடி. 337)

பாத்திரத்துள் நெய் இருப்பின் உறவாட எறும்புக்கூட்டம் திரளும் என்று நாலடியார் சொல்லுமாப் போல், பொருளாளிக்கு நட்புப் பெருகும். இல்லாளிக்கு இருந்த நட்பும் விலகப் பார்க்கும். 'இல்லாரை எல்லாரும் எள்ளுவர்' (752) என்பர் ஆசிரியர். இதற்கு ஒரு விளக்கமாக, 'ஈன்ற தாயானும் பிறன்போல நோக்கப்படும்' (1047) என்று மேலும் கூறுவர். சமுதாய உறவு கிடக்க, பெற்ற தாயுறவுங் கூட வறிய மகனுக்கு வாடிப் போகும் என்று உணரலாம்.

மனிதன்-சமுதாயத்தின் ஒரு மணலாகக் கிடக்கும் மனிதன்-செல்வனாகத் திகழ முடியாவிடினும் கேவலம் வறியவனாக வதங்கக் கூடாது, மனிதன் இரவலனாகச் சமுதாயத்தில் நடமாடக்கூடாது என்பது வள்ளுவரின் அதிராக் குறிக்கோள். ஆதலின் 'பொருளிலார்க்கு இவ்வுலகம் இல்லாகியாங்கு' (247) என்று கடுநடையில் உவமையில் வைத்து எச்சரிக்கின்றார். 'இல்லாரை எல்லாரும் எள்ளுவர்' என்னும்போது நானும் கூடச் சேர்ந்துகொண்டு

வறியனை இகழ்வேன் என்று உட்படுத்திக் கொள்கின்றார் போலும்.

இன்மையின் இன்னாதது யாதெனின் இன்மையின்
இன்மையே இன்னா தது (1041)

வறுமைக்கு உவமை வறுமையே. அதன் கொடுமையை விளக்கிக்காட்ட வேறு ஓர் உவமை இல்லை. வறுமை உவமையுலகத்தையே வள்ளுவர்க்குக்கூட வறிதாக்கி விட்டது. நல்குரவு என்ற பெயரால் வறுமைக்கு ஓர் அதிகாரம் வைத்துப் பத்துக் குறள்களில் வறுமையின் கொடிய இழிவுகளை வெளிப்படுத்துகின்றார். வறுமை என்பது எவ்வாற்றானும் கூடாது ; பொருளீட்டுதல் உலகக் கடமை. ஈட்டாது விதி விதியென்று கூறிக்கொண்டு மடிந்து கிடக்கற்க என்று வள்ளுவர் அறையும் திருக்குறட் பறை போல் யாரும் அறைந்ததில்லை. 'செய்க பொருளை' (759) என்பது அவரது ஆணை. இன்ன அளவு பொருளீட்டினாற் போதும் என்று திருக்குறள் செல்வ வரம்பு செய்யவில்லை. சோம்பல் பற்றாத மன்னவன் திருமால் அளந்த உலகத்தையெல்லாம் அடைவான் என்பதனால், பொருளிற் பேராசையை வள்ளுவர் தூண்டுகின்றாரேயன்றிக் குறைத்துக் கொள்ளச் சொல்லவில்லை. ஒண்பொருள் காழ்ப்ப-கெட்டியாக இயற்ற வேண்டும் என்பது அவர் ஊட்டும் ஆர்வம்.

'குன்றேறி யானைப் போர் கண்டற்றால்
(756)

என்ற உவமையிலிருந்து எவ்வளவு பொருட் குவியலுக்கும் மனிதன் ஆசைப்படலாம் என்பது புலனாகின்றது. பொருளாசைப்படுக, நும் முயற்சி திருவினையாக்கும் என்பது வள்ளுவ வாழ்த்து.

பொருட்பயன் :

திருக்குறள் வறட்டுக் கொள்கை பேசவில்லை. நன்றாக முயன்று குன்றாத பொருளீட்டி நலமாக இவ்வுலகில் வாழ்

கின்ற வாழ்வுக் கொள்கையே சாற்றுகின்றது. பொருளின் இன்றியமையாமையை - பொருள் முயற்சியை - பொருள் வேட்கையை இவ்வளவு அழுத்தமாகத் திருக்குறள் இயம்புவதேன் ? பொருளீட்டுவது குறிக்கோள் இல்லை. சமுதாய உறவைப் பெருக்கிக் கொள்ளுதல் என்னும் குறிக்கோளுக்காகப் பொருளீட்டுகின்றோம். அணை நீர்த் தேக்கம் காண்பது நம் குறிக்கோளா ? இல்லை. ஆயிரமாயிரம் வேலிப்பயிரை விரிப்பது நம் குறிக்கோள். பொருளீட்ட வேண்டும் என்பதற்கு எவ்வளவு குறள்கள் உள்ளன ; அவ்வளவு குறள்களுக்கும் மேலாக, கொடுப்பாய், ஈவாய், ஒப்புரவு ஆற்றுவாய் என்பது பற்றிக் குறள்கள் உள. எது மனிதத் தொழில் ? ஈதல். எது மனித வாழ்வு ? கொடுத்து வாழ்தல், எது மனிதனுக்கு முடிவான பயன் ? கொடைப் புகழ் என்று முடிப்பர் வள்ளுவர். பொருளிலார்க்கு இவ்வுலகம் இல்லை என்ற ஆசான், பொருளுடையார்க்கு, ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்லது ஊதியம் இல்லை என்று வாழ்வின் பயனை அறுதியிட்டுரைப்பதை நினையவேண்டும்.

சுற்றத்தார் சுற்றப்பட ஒழுகல் செல்வந்தான்
பெற்றத்தாற் பெற்ற பயன். (524)

ஒருவன் எவ்வளவு பொருளீட்டினுன் என்பதைக் காட்டும் அளவு கருவி என்ன ? எவ்வளவு சுற்றம் உறவாயிற்று; எவ்வளவு சமுதாயம் பயன் பெற்று அவனை உறவாகக் கொண்டது; இதுவே பொருள் மானி. உறவு பெருக்காதவனது செல்வத்தை நன்றியில் செல்வம் என்று ஓர் அதிகாரம் முழுதும் இகழக் காண்கின்றோமே. உறவிலாச் செல்வத்தைப் பழுத்த நச்சுமரம் எனவும் அச் செல்வனை நச்சப்படாதவன் எனவும் பழிக்கப் பார்க்கின்றோமே.

பொருளானும் எல்லாமென்று ஈயா திவறும்
மருளானும் மாணுப் பிறப்பு (1002)

இக் குறளில் பொருளுக்கு உரிய மதிப்புப்பற்றியும் மயக்கம் பற்றியும் தெளிவிப்பர் ஆசிரியர். வாழ்வுக்கு வேண்டிய

எல்லாமே உலகில் பொருளால் நடந்துவிடும் என்று நினைக்கின்ற போக்கு தப்பு என்பது அவர் தம் இடிப்புரை. பொருளை வாழ்விக்க வந்த நற்றுணை என்று அறியாது, பொருளே வாழ்வு என்று மயங்கும் மதியனைப் பித்துக்கொளி என்பது அவர்தம் ஏச்சுரை. தேக்கிய நீரைப் பாய்ச்ச வேண்டும். நெய்த ஆடையை உடுத்த வேண்டும். சமைத்த உணவை உண்ண வேண்டும். கட்டிய வீட்டில் குடியிருக்க வேண்டும். கற்ற கல்வியைக் கற்பிக்க வேண்டும். அவைபோல் ஈட்டிய பொருளை ஈய வேண்டும். இருப்பிற் பயனில்லை. செலவிற்றான் பயனுண்டு. ஈயாது இறுகப் பிடிப்பது மருள்; அங்ஙனம் பிடிப்பவன் அல் பிறவி என்பது பொய்யில் புலவரின் வசையுரை.

## பொருள் நெறி:

ஈட்டுவதிலும் பல நிலைகள், ஈவதிலும் பல நிலைகள், இன்மையிலும் பல நிலைகள், உடைமையிலும் பல நிலைகள். பொருள் வேண்டும், ஒருவந்தம் வேண்டும் என்பதற்காக எதுவும் செய்யலாமோ? ஈட்டுவதற்கு எம் முறைகளையும் மேற்கொள்ளலாமோ? பொருள் வந்தாற் போதும் என்று நினைக்கலாமோ? எச் செய்கையும் முறையோடு செய்யப் பட வேண்டும். வாழ்வுக்குப் பொருளா? பொருளுக்கு வாழ்வா? வாழ்வு என்பது பழிபடா வாழ்க்கை, சமுதாயம் நன்கு மதிக்கும் வாழ்க்கை. மனிதனுக்கு மெய்யான உடைமை எது? விட்டு நீங்கா உடைமை எது? உலகத்தையே நாம் தேடினாலும் அது நம் உடைமையாகாது. அகச் சொத்து ஆகாது. செல்லும் இடமெல்லாம் உடன் வாராது. பொருளுடையார் எல்லாம் உடையார் என்று வள்ளுவர் கூறவில்லையே. 'அறிவுடையார் எல்லாம் உடையார்' என்பதே அவர்தம் பொருளுரை. இன்னும் ஒரு படி சென்று, எவ்வளவு செல்வமிருந்தாலும் என்ன, 'அறிவிலார் என் உடையரேனும் இலர்' (430); அறிவு என்ற நிலையுடைமை இல்லாதார் வறியவரே என்று மாற்றுடைமை சுட்டுவர். ஏன்? அறிவொன்றே மனிதன் வாழ்வாங்கு வாழ்

வதற்கு வழி காட்டுவது. அறிவு என்பது ஓயாச் சிந்தனை, வாழ்க்கையலசல். எது வேண்டும்? எது வேண்டாம்? எப்படி என் வாழ்வு இன்று ஓடுகின்றது? இப்படி ஓடலாமா? வேறு விதமாக வழிப்படுத்த வேண்டுமா? மனம் அல்வழிச் செல்கின்றதா? அதனைப் பிடித்து இழுத்து நல்ல பாதையில் செலுத்த வேண்டுமே! வரவு பெரிதா? செலவு பெரிதா? நட்பைப் பெருக்கிக் கொள்வது, பகையை நட்பாக்கிக் கொள்வது, சிறு நட்பைத் துணிந்து விலக்குவது, பெரிய வர் நட்பை வருந்திப் பேணுவது, கட்டுப் படுத்துவது, கட்டுப்பாட்டை பெருக்கிக் கொள்வது, எத்துறையிலும் அளவறிந்து பழகுவது, அளவறிந்து செய்வது, அளவறிந்து அடங்குவது என்று இச் சிந்தனைகள் எல்லாம் வாழ்வாங்கு வாழ்தற்கு வேண்டும்.

வாழ்வுக்கு வேண்டும் என்ற இப் பரந்த சிந்தனைகளில் நாளும் நாட்டம் செலுத்தாது, ஓரேருழவன் போலப் பொருளொரு சிந்தனை மட்டும் உடையவன் வாழ்வாங்கு வாழ்பவனாக ஆகான். தக்க கருவியாகிய பொருளிருந்தும், சிந்தனை வறியவன் ஆலமரம் அரசமரம் போல எண்ணக் கிளை பெருக்கி விரிந்து சமுதாய நிழலில் வாழமாட்டான். பாலை நிலக் குறும்புதர் போல வாழ்வு முடங்கியாக இருந்து மடிவான். முயன்று எனைப் பொருளீட்டுக; கொடையால் சமுதாயவுறவு பெருக்குக; விரிந்து நுணுகிச் சிந்திக்க; எல்லாம் தரும் அறிவுடைய மனிதனாய் நிலைபெறுக என் பதுவே வள்ளுவரின் வாழ்வியல்.

# 5. தூய இலக்கியம்

சங்க இலக்கியம் இரண்டாயிரம் ஆண்டுக்கு முற்பட்ட பழமை வாய்ந்தது. இஃது அகத்திணையிலக்கியம் புறத்திணை யிலக்கியம் என இருவகைப்படும். அகத்திணை கூறும் பொருள் என்ன? காதலும் குடும்ப வாழ்க்கையும். இந்த வகையிலக்கியம் தமிழுக்கே உரிய பெருமையுடையது என்று பிறமொழி கற்ருர் எல்லாம் தெளிவாகச் சொல்லியுள்ளனர். அகத்திணை தமிழினத்தின் தனிப்படைப்பு. தமிழ் சொல்லிக் கொடுப்பது என்ருல் அகத்திணை சொல்லிக் கொடுப்பது - அதாவது அன்பான காதலுறவையும் அன்பான இல்லற வாழ்வையும் சொல்லிக் கொடுப்பது என்பது நம் முன்னோர் கருத்து. திருவள்ளுவர் காமத்துப்பால் என்ற அகத்திணை பாடினார். 'உயர்மதிற் கூடலின் ஆய்ந்த ஒண்தீந்தமிழ் இன்துறை' என்று மணிவாசகர் அகத்திணையை 'இன்துறை' எனத் திருகோவையாரில் பாராட்டுகின்ருர். இத்தகைய இலக்கியத்துறை தீந்தமிழிலேதான் உண்டு என்பது அவர் கருத்து.

புவியினுக் கணியாய் ஆன்ற
    பொருள்தந்து புலத்திற் ருகி
அவியகத் துறைகள் தாங்கி
    ஐந்திணை நெறியளாவிச்
சவியுறத் தெளிந்து தண்ணென்
    ருெழுக்கமும் தழுவிச் சான்ருேர்
கவியெனக் கிடந்த கோதா
    வரியினை வீரர் கண்டார்

(ஆரணி-சூர்)

என்பது இராமாயணம். அகத்திணையின் உலக மதிப்பையும் பொருட்சிறப்பையும் நெறியையும் தெளிவையும் ஒழுக்

கத்தையும் காட்டுவதற்கு ஒரு முழுப் பாடலே தொடுத்தார் கம்பர்.

சங்கப் பாடல்கள் 2381. இவற்றுள் அகத்திணைப் பாடல்கள் 1862. அதாவது முக்காற் பாகம். சங்கப் புலவர்களின் தொகை 473. இவருள் அகத்திணை பாடினோர் தொகை 378. அதாவது முக்காற் பாகத்தர். இதனால் அகத்திணையின் சிறப்பும் பரப்பும் அதனை நுனித்து ஆராய வேண்டிய நம் கடமையும் பெறப்படும். சங்கத்துக்குப்பின் எழுந்த காப்பியங்களிலும் அருட்பாசுரங்களிலும் சிற்றிலக்கியங்களிலும் நாட்டுப் பாடல்களிலும், ஏன்? இன்று பல்கி வரும் திரைப்பாடல்களிலும் தமிழன் பாடிக் களிக்கும் காதற்பாட்டு எதிலும்-அகத்திணையின் சாயல் படியாமல் இருப்பதில்லை. ஆயினும் அகத்திணையின் அடிப்படையுண்மைகள் ஆயிரத்தைந்நூறு ஆண்டுகளாகத் தெளிவின்றியும் திரிபாகவும் கற்பிக்கப்பட்டு வரக் காண்கின்றோம். கி. பி. நாலாவது நூற்றாண்டுக்குப்பின், பிறராட்சியாலும் பிறமொழித் தாக்கலாலும் சங்கத் தமிழ்க் கல்வி முறை மாறிவிடவே, தொல்காப்பியத்துக்கும் சங்க இலக்கியத்துக்கும் கலப்புப் பொருள்கள் உரைக்கப்பட்டன. குலம் சாதி சமயம் கடந்த-அன்பு ஒன்றையே காதலுக்கு முதலாகக் கொண்ட அகத்திணைக்கும் பிற்காலப் பிரிவுக் கூறுகளைப் புகுத்தி விளக்கச் செய்தனர் இடைக்காலோர். அகத்திணை, கைக்கிளை, ஐந்திணை, பெருந்திணை, என்ற தலையாய குறியீடுகளுக்குக்கூட அன்பும் அறமும் அல்லாத விளக்கங்கள் எழுதுவதும் கற்பிப்பதும் ஒரு மரபு போல வந்திருத்தலின், 1500 ஆண்டுகளாக அகத்திணையின் உண்மையும் பொதுமையும் ஒழுங்கும் புதைகுழிப்பட்டன. தமிழ் கண்ட தன்னேரில்லாத அகத்திணையின் இடைக்கதை இவ்வாறாயிற்று. ஆதலின் உண்மையைக் கண்டு தெளிதற்கு ஒரு சில சங்கப் புலவர்களையோ ஒரு சில சங்கப் பாடல்களையோ ஒரு சோற்றுப் பதம்போல் பார்ப்பது தகவாகாது. 378 அகப் புலவர்களையும் ஒருங்குவைத்துப் பலவகைப் படுத்தியும் பல தொகைப்படுத்தியும் அலசல் வேண்டியதாயிற்று.

அங்ஙனம் அகத்திணை குறித்துத் தேர்ந்து ஓர்ந்து நான் கண்ட முடிபுகளில் மூன்றினை இங்கு வானொலிக்கின்றேன்.

அகத்திணையின் பொருள் :

ஆண், பெண் காதல் பற்றியும் பாலிணைவு பற்றியும் எல்லா மொழியிலும் எல்லா இலக்கியங்களும் பாடுகின்றன, கற்பனைப்படுத்துகின்றன, தித்திக்க மொழிகின்றன. அவ்வாறாக, தமிழ் அகத்திணைக்கு என்ன தனிப்பெருமை என்று கேட்கலாம். காதல் பாடுவதால் அகத்திணைக்குச் சிறப்பு என்பதில்லை. இவ்வகையான காதலை இவ்வகையாகத்தான் பாடுவது என்ற கட்டுப்பாடே அகத்திணையின் சிறப்பு. காதற் பொருளிலும் கட்டுப்பாடு. அதனைச் சொல்லும் முறையிலும் கட்டுப்பாடு. இவை அகத்திணை நெறிகள். காதலுலகம் மிகப்பெரிய உலகம். அங்கு எத்தனையோ கலவரங்கள், சரிவுகள், குழிகள், பழிகள், கட்டாய மணம், கணவன் மனைவி ஒருவரையொருவர் ஐயப்பாடு, குணக்கேடு, கள்ளக்காதல், கள்ளப்பேறு, கருவழிப்பு, விட்டோடுதல், வழக்காடுதல், குடுமிபிடித்தல், கூந்தல் பிடித்தல், எவ்வளவோ நிலையழிவுகள் பாலுறவில் உள்ளன. உலகில் நடப்பன எல்லாம் பாடலாமா? புதினங்களும் சிறுகதைகளும் நாடகங்களும் காப்பியங்களும் இவற்றைச் சுவைபடப் பலபடப் புனைகின்றன. வழிப்படுத்துவதைக் காட்டிலும் சுவைப்படுத்துவதே இவற்றின் ஆசை. பிற இலக்கியங்கள் சுவைக்காக எக்காதலையும் பாடும். எப்படியும் பாடும். புரண்டோடும் வெள்ளத்துக்கு உள்ள கரையையும் இடித்துவிட்டு வேடிக்கை பார்க்கும் இலக்கியங்களே பல. அவை தனி மனிதன் அறிவுக்குச் சுவையாவன; ஆனால் தனி மனிதனுக்கும் சமுதாயத்துக்கும் நச்சாவன.

அகத்திணை அன்புக் காதலை மட்டுமே பாடும், அறிவுறுத்தும். இயல்பாகச் சில சிக்கல்கள் தோன்றும் போது, காதலர்கள் எப்படி அன்பாக நடந்து இணைந்து கொள்ள வேண்டும் என்று வழியும் பொறுப்பும் காட்டும். அது ஒரு

தூய இலக்கியம். தன் மகள் ஒருவனேடு கொண்ட காதலுறவு அவள் குடும்பத்தார்க்குப் பிடிக்கவில்லை. மகள் செய்தியறிந்த அன்னையும் துடிக்கின்ருள். இப்படி நடந்து விட்டதே என்று உடன் பிறந்த அண்ணன்மார்களும் சினங் கொண்டு அத்தலைவனைப் பகையாகக் கருதி அம்பும் வில்லும் பார்க்கின்றனர். ஒரு நாள் முழுதும் சினம் தணிந்த பாடில்லை. முடிவு நாம் நினைப்பதுபோலப் புதின மாக வில்லை, சிறுகதையாகவில்லை.

அவரும்,

தெரிகணை நோக்கிச் சிலைநோக்கிக் கண்சேந்து
ஒருபகல் எல்லாம் உருத்தெழுந் தாறி
இருவர்கட் குற்றமும் இல்லையால் என்று
தெருமந்து சாய்த்தார் தலை (கலி. 39)

வெகுண்ட அண்ணன்மார் தன் தங்கை என்ன குற்றஞ் செய்தாள், அவளைக் காதலித்தவனும் செய்த குற்றம் என்னே? தம் வாழ்வுக்கு உரியவர்களை அன்பினுல் தேர்ந்து கொள்வது குற்றமில்லை. அதுதானே கற்பு என்று அறிவு வந்து, தாம் செய்ததற்கு வெட்கப்பட்டனராம். இவ் வண்ணம் காதலர்களுக்கேயன்றித் தொடர்புடைய வீட்டார்க்கும் நேர்வழி காட்டுவது அகத்திணை. சிறிய சிக்கலைப் பின்னிப் பெருஞ் சிக்கலாக்காமல் தொடக்கத்திலேயே நெறிப்படுத்துவது அகத்திணை.

## அகத்திணைப் பாடல் அமைப்பு :

சிலப்பதிகாரத்தில் கோவலன் கண்ணகி மாதவி மணி மேகலை தேவந்தி மாசாத்துவான் என்று இயற் பெயர்கள் வருவது போலவும், இராமாயணத்துத் தசரதன், கோசலை, கைகேயி, இராமன், சீதை, இலக்குவன் என்று பாத்திரப் பெயர்கள் வருவது போலவும் அகப் பாடலில் யாருக்கும் பெயர் சொல்லக்கூடாது என்பது உயிரான இலக்கணம்.

மக்கள் நுதலிய அகனைந் திணையும்
சுட்டி ஒருவர் பெயர்கொளப் பெருஅர்
(தொல். 999)

என்று தொல்காப்பியம் விதிக்கின்றது. காதலர்கள் ஒத்த நல்ல அன்புடையவர்கள் தானே; பெயர் சொன்னால் காதல் குறைவு பட்டுவிடுமா என்று கேட்கலாம். மக்கள் பெயர் தாங்கி வரும் காதல், காதற்பாட்டு ஆகுமேயன்றி அகம் என்ற பாட்டாகாது. அகப் பாட்டு பொதுவானது. பெயரில்லாமையினால் படிப்பவர் ஒவ்வொருவரும் எனக்கு எனக்கு என்று கொள்ளத்தக்க உரிமையுடையது. தலைவி தன் காதலன் தொடர்புப் பெருமையைச் சொல்லும் ஒரு குறுந்தொகைப் பாடல் :

நிலத்தினும் பெரிதே; வானினும் உயர்ந்தன்று;
நீரினும் ஆரள வின்றே; சாரற்
கருங்கோற், குறிஞ்சிப் பூக்கொண்டு
பெருந்தேன் இழைக்கும் நாடனொடு நட்பே
(குறுந். 3)

என் காதலனுடைய நட்பு நிலத்தைக் காட்டிலும் அகல மானது, வானத்தைக் காட்டிலும் உயரமானது, கடலைக் காட்டிலும் ஆழமானது, எவ்வகையிலும் அளவை கூற முடியா நிறையுடையது என்று பெயர்ச்சுட்டின்றி வரும் போது, இப்பாடல் ஒவ்வொருவர்க்கும் உடைமையா கின்றது. தலைவன், தலைவி, காதலன், காதலி, தாய், தந்தை, செவிலி, தோழி என்று உறவுப் பெயர் சொல்ல லாம். மலை, கடல், நாடு, ஊர் என்றவாறு நிலப்பெயர் சொல்லலாம். ஆயர் வேட்டுவர் உழவர் என்றாங்கு தொழிற்பெயர் சொல்லலாம். எப்படியும் பெயர் ஒரு வரைச் சுட்டாமல் பொதுமை தழுவ வேண்டும் என்பது அகப்பாட்டின் மாறா அமைப்பு.

மெய்தான் அரும்பி விதிர்விதிர்த்து
உன்விரை யார்கழற்கென்
கைதான் தலைவைத்துக் கண்ணீர்
ததும்பி வெதும்பியுள்ளம்

பொய்தான் தவிர்ந்துனைப் போற்றி
சயசய போற்றி என்னும்
கைதான் நெகிழவிடேன் உடையாய்
என்னைக் கண்டுகொள்ளே (திரு. 1)

என்பது திருவாசகம். இத்தகைய அருட்பாடல்களிலும் இயற்பெயர் வரவில்லை. பொதுமையுண்டு என்றாலும் ஒரு நுண்ணிய வேறுபாடு உண்டு. 'உன்னைப் போற்றி சயசய போற்றி என்னும் கைதான் நெகிழவிடேன்' என்ற போதும், 'என்னை யாண்டு கொண்டான் என் சிறுமை கண்டும்' என்றபோதும், 'உன் அருள் பெறு நாள் என்றென்றே வருந்துவனே' என்றபோதும் இவை பொது நடையாக இருந்தாலும் மணிவாசகரின் பயில்வு என்று சொல்லுகின்றோம். பாடற் பொருளுக்கும் பாடியவருக்கும் தொடர்பு ஊட்டுகின்றோம். அகத்திணைப் பாடலில் வரும் காதற் பொருளுக்கும் பாடிய அகப்புலவர்க்கும் பயில்வு சொல்லுகின்றார் என்று தொடர்புபடுத்தவே கூடாது. காதலன் விரைவில் மணஞ் செய்து கொள்ளாதபோது வருந்திக் கதறிய காதலியின் ஒரு குறுந்தொகைப் பாடல் :

முட்டுவேன்கொல்? தாக்கு வேன்கொல்?
ஓரேன் யானுமோர் பெற்றி மேலிட்டு
ஆஅ ஒல்லெனக் கூவு வேன்கொல்?
அலமரல் அசைவளி யலைப்பவென்
உயவுநோ யறியாது துஞ்சும் ஊர்க்கே
(குறுங். 28)

ஒருவனோடு என் காதலை வீட்டார் அறியவில்லை. எதனோடும் என் தலையை முட்டிக் கொள்ளலாமா? உடலை இடித்துக் கொள்ளலாமா? ஏதாவது ஒரு சாக்குப் போக்குச் சொல்லி ஆ ஓ என்று அலறலாமா? அப்போதாவது தூங்கும் வீட்டார் விழித்துக்கொண்டு இந்த நள்ளிரவில் என்ன வந்தது என்று கேட்கமாட்டார்களா? என்று இன்னணம் புலம்புகின்றாள் களவுத் தலைவி. இவ்வகப் பாடலை யாத்தவர் ஔவையார். பாடினார் என்ற கட்டுத் தொடர்பு தவிரப் பாட்டின்

பொருளோடு ஔவையார்க்கு ஒரு சுட்டுத் தொடர்பு பொருத்திக் குறிப்பாகவும் கூறக் கூடாது. இஃது அகப் பாடலைக் கற்கும், கற்பிக்கும் முறை.

அகத்திணை நோக்கம் :

பிறர் வாழ்க்கைக் குறிப்போ, பெயர்க்குறிப்போ தோன்றாது யாத்த தூய காதல் இலக்கியம் அகத்திணை. தமிழ்ச் சான்றோர்கள் இத்தகைய அடக்கமான காத லிலக்கியத்தை ஏன் கண்டுபிடித்தனர்? உலகநிலைபேறு காதலில் உண்டு. அது அன்பான அடக்கமான காதலில் உண்டு. மிண்டிய மண்டிய திமிறிய பாலுறவு ஆணுக்கும் பெண்ணுக்கும் நல்லதன்று, மக்கட் சமுதாயத்துக்கும் நல்லதன்று. பாலுறவு விலங்கு முதலியவற்றுக்கும் உண் டென்றாலும், அவ்வுணர்வு அஃறிணைக்கு ஒரு வரம்பில் அமைந்துள்ளது. இனப்பெருக்கம் வேண்டிய பருவ காலங் களில் பாலெழுச்சி தோன்றுகின்றது. பின்னர் மடிந்து விடுகின்றது. மக்களோ மனவுணர்வு உடையவர்கள். ஆடல் பாடல் கேளிக்கைகளாலும் ஓவியங்களாலும் இன்சுவைச் சொற்களாலும் பாலெண்ணத்தை உரமிட்டு வளர்த்துக் கொள்பவர்கள். இனப்பெருக்க நாட்டமின்றி இன்பம் நாடியே உறவாடுபவர்கள். ஆதலின் மக்கட்குப் பாலுறவுக் கல்வி இன்றியமையாதது. மரவியல் விலங்கியல் உடலியல்போலப் பாலியலை அறிவியல் முறையிலும் கற் கலாம், அது உணர்ச்சியைத் தொடாது. இலக்கிய முறையே நெஞ்சையும் உணர்ச்சியையும் இயக்க வல்லது. ஆதலின் மக்கட்கு ஆண் பெண் உறவுக் கல்வியையும் குடும்பக் கல்வியையும் கற்பிப்பதற்கென்று கண்ட தூய இலக்கியமே அகத்திணை.

ஆணும் பெண்ணும் ஒருவர் காதல் விருப்பத்தையும் அளவையும் மற்றொருவர் புரிந்து கொள்ள வேண்டும். இன்பக் குறைவு தோன்றக்கூடாது. ஒளிவும் மறைவும் ஒப்புக் காண்டலும் கூடா. இன்ப நிலையில் பெருமை சிறுமைக்கு இடமில்லை. நிறைவான இன்பத்துக்கு ஊடல்

வேண்டும். ஊடல் குறைவு பட்டால் உள்ளமும் குறைவு படும். குடும்பப் பொறுப்பு தலைவியுடையது. தலைவனையும் திருத்தும் உரிமைக் கற்புச் சான்றவள் தலைவி. காதலர்கள் தம்முள் பூசலைப் புறத்துத் தோன்றாது ஒழுங்கு படுத்திக் கொள்ள வேண்டும். ஒருகால் ஒத்துவராத பூசல் வந்தால், பிரிய நினைக்கக்கூடாது. பெற்றோர்களின் துணைகொண்டும், சான்றோர்களின் துணைகொண்டும் குடும்ப ஒருமையைக் காத்துக் கொள்ள வேண்டும். குடும்பம் சமுதாயத்தின் ஓர் உறுப்பு என்ற எண்ணத்தோடு ஒற்றுமையாகவும் முயற்சியாகவும் உதவியாகவும் இல்லறத்தை நடத்த வேண்டும். இங்ஙனம் இன்பவுறவிலும் சமுதாயவுறவிலும் நாணமும் கற்பும் தழுவிய இல்லறக் கல்வியை அகத்திணையிற் கற்கின்றோம்.

பண்டை தமிழர் கண்ட அகத்திணையின் தூய்மையையும் உலகப் பொதுமையையும் இற்றைத் தமிழர் உணர வேண்டும். இந்த அகத்திணைக் கல்வி இளைஞர்கட்கு இளமையில் முறையாகக் கற்பிக்கப்பட்டால், இன்பக் குமுறல்களும் குடும்பக் கோணல்களும் குறைவுபடும் என்பது யான் கண்ட அகத்திணை ஆராய்ச்சியின் முடிபு.

எல்லா உயிர்க்கும் இன்பம் என்பது
தானமர்ந்து வரூஉம் மேவற் றாகும்

என்பர் பாலியலறிஞர் தொல்காப்பியர்.

# 6. நடைமுறை அறங்கள்

## 1. கடமைத்தொண்டு

ஒவ்வொருவர்க்கும் இரு கடமைகள் உண்டு. ஒன்று வீட்டுக் கடமை; மற்றொன்று சமுதாயக்கடமை. இவற்றுள் வீட்டுக் கடமை வெளிப்படையானது, இயல்பானது. 'இயல்பினுன் இல்வாழ்க்கை வாழ்பவன்' என்று வள்ளுவர் குறிப்பிடுவர். பெற்றோர்க்கும் சுற்றத்தார்க்கும் குடும்பத்துக்கும் குழந்தைகட்கும் செய்வனவெல்லாம் பள்ளத்து நீரோட்டம்போல மிக இயல்பான கடமைகளாகும். இவற்றைச் செய்வதால் புகழ் வருவதில்லை. செய்யா விட்டாற்றான் பழி வரும். குடும்பக்கடமை இயல்பு என்றாலும் எளிதில்லை. எல்லா நலம் தீங்குகளும் குடும்பத்தைத் தாக்குகின்றன. நாடு என்பது குடும்பங்களின் தொகுதி. சட்ட திட்டங்களும் போர்ப்பூசல்களும் ஆட்சி மாற்றங்களும் கடைசியில் குடும்பக்கரையை மோதுகின்றன. குழந்தை வளர்ச்சி, குடும்ப வுறவு, குடும்பக்காப்பு, குடும்பப் பொருளாதாரம், குடிக்குணம் இவையெல்லாம் சிறிய செயல்கள் அல்ல. இதனை 'இல்லாண்மை' என்று பாராட்டுவர் வள்ளுவர். பேராறு நேரே வயலை வளப் படுத்தாது. சிறு வாய்க்கால்தான் வயலை வளமாக்கும். ஆதலின் நன்றாகத் தன் குடும்பத்தை நடத்துவாரை நாட்டின் ஒரு பகுதிக் கடமையைச் செய்பவராகவே மதிக்க வேண்டும். குடிசெயல்வகை என்ற அதிகாரத்தில், தன் குடும்பம் பேணுவதை ஒரு பெருங் குறிக்கோளாகக் கருத வேண்டும் என்று திருக்குறள் வலியுறுத்தும்.

குடும்பக்கடமை சிறந்தது என்றாலும் அதனைத் தொண்டு என்று கூறுவதில்லை. குடும்பக் கடமிகளைக் குடும்பத் தொண்டர்கள் என்று புகழ்வதுண்டா? குடும்பந் தாண்டிச்

செய்யும் சமுதாயக் கடமைகளே தொண்டு எனப்படும். இன்றைய மக்கள் மனப்பான்மையில் தனக்கு என்ற உணர்ச்சி வளர்கின்றதா? சமுதாயத்திற்கு என்ற உணர்ச்சி வளர்கின்றதா? என்று மதிப்பீடு செய்தால், எல்லாம் தனக்கு என்ற குறு எண்ணமே தடிக்கக் காண்கின்றேம். தேவைப் போராட்டம் தன்னலவுணர்ச்சியைப் பல மடங்கு பெருக்கிவிட்டது. ஈட்டிய எல்லாம் எனக்கே போதா என்ற மனமை ஊறிப் பீறுகின்றது. குடியரசு என்ற முறையில் சமுதாயத்துக்கு வேண்டியவற்றை அரசு செய்யட்டும் என்று கழித்து விடுகின்றேம்.

அரசு சமுதாயப் பெருநலங்களைச் செய்தாலுமே மக்கள் செய்யவேண்டிய சமுதாயத் தொண்டுகளும் பலவுள. சிறு துளி பெருவெள்ளம், ஒரு பிடி பலபடி என்பது போல ஒவ்வொருவரும் தம்மால் இயன்ற பொதுத் தொண்டு செய்தால் சமுதாயம் கூட்டுவளம் பெறும்.

ஒல்லும் வகையான் அறவினை ஓவாதே
செல்லும்வா யெல்லாம் செயல். (33)

எவ்வகையாலும் முடிந்த அளவு பொதுத்தொண்டு செய்து கொண்டிருக்க வேண்டும்; எவ்விடத்து எவ்வளவு என்பதனை அவரவர் தீர்மானித்துக்கொள்ள வேண்டியது என்று வள்ளுவர் பொதுப்படச் சொல்லுவர். மக்களினம் பெருகி வரும் இக்காலத்தில் தொண்டுக்கு இடமும் பெருகியுள்ளது. பொருளிருந்து தொண்டு செய்யவேண்டும் என்பதில்லை. பொருளில்லாமலே எவ்வளவோ தொண்டுகள் செய்யலாம். மேலும் தொண்டுகளில் சிறியன பெரியன என்ற வேறுபாடும் இல்லை. வீதியிற் கிடக்கும் முள்ளினை, கண்ணுடித் துண்டினை, இலாடத்தைக் குனிந்து எடுத்து ஒதுப்புறமாகப் போடுவது தொண்டில்லையா? கிடப்பது தெரிந்தும் எடுத்தெறியாவிட்டால், யார் காலிலாவது கண்ணுடித் துண்டு பாய்ந்தால் எவ்வளவு புண்பாடு ஏற்படும்? தீயவிளைவை நோக்கும்போது, கண்ணுடித்துகளை அப்புறப்படுத்துவது பெருந்தொண்டல்லவா? வீதிக்குழாயிலிருந்து தண்ணீர்

விழுந்துகொண்டிருந்தால் அதனை அடைத்துத் தண்ணீரைக் காப்பது சமுதாயத் தொண்டு. வீட்டில் கூட்டிய குப்பையை வீதியில் எறியாது, வீட்டுக் குழியில் போடுவதும், கொண்டு சென்று வீதித் தொட்டியிற் போடுவதும் சமுதாயத் தொண்டு. கண்டவிடங்களில் காறித் துப்பாமை, பொது விடங்களைக் கெடுக்காமை, சுவர்களில் கண்டபடி எழுதாமை, காம விளம்பரங்கள் ஒட்டாமை இவையெல்லாம் சிறியன வாகத் தோன்றினும், சிறந்த சமுதாயத் தொண்டு களாகும். புகைவண்டிகளில் பிறர்க்கும் இடங்கொடுத்தல், முதியவர்க்கும் நோயாளர்க்கும் மிக்க இடவசதியளித்தல், பொருள்களை அளவாக எடுத்துச்செல்லுதல் எல்லாம் சமுதாய நலங்களே. விளம்பரப் பலகைகளில் மொழிப் பிழைகள் இருந்தால் அவற்றைத் திருத்துவதும் ஒரு சமுதாயத் தொண்டெனவே கருதவேண்டும். இங்ஙனம் பொது நலங்கள் பல யாரும் செய்யலாம். இவற்றைச் செய்வதற்குப் பணம் வேண்டுமா?

சமுதாயத் தொண்டு என்பது யாரோ பெரியவர்கள் செய்யவேண்டிய செயல் என்று மலைக்கவேண்டா, ஒதுக்க வேண்டா. குடும்பக்கடமையும் சமுதாயத் தொண்டும் சேர்ந்து செய்ய முடியாது என்று தவருக எண்ண வேண்டா. தன் தோட்டத்தில் மரம் வைப்பது குடும்பக் கடன். தன் வீட்டுக்கு முன்னே பொது வீதியில் மரம் வைப்பது சமுதாயக்கடன். தன் குழந்தைக்குப் பாடஞ் சொல்லிக் கொடுப்பது குடும்பக்கடன். அதனோடு இன்னொருவர் குழந்தையையும் உடன்வைத்துச் சொல்லிக் கொடுப்பது சமுதாயக் கடன். இவற்றைப் பெரியவர்களாகித்தான் செய்யவேண்டுமா! இவற்றைச் சிறு பருவ முதல் செய்து பெரியவர்களாகக் கூடாதா? எப்பருவத்தினரும் எந்நிலை யினரும் செய்யக்கூடிய சமுதாய நலங்கள் ஏராளமாக உள்ளன. இவற்றைச் செய்வதற்குப் பணம் தேவையில்லை; மனமே தேவை. அழைப்புத் தேவையில்லை; உழைப்பே தேவை. அறிவுகூடத் தேவையில்லை; அன்பு கூடத்தேவை.

## 2. துன்பச்சுவை :

எல்லோரும் வாழ விரும்புகின்றோம். இருந்தாலும் சிலரே செம்மையான திறமையான ஆற்றலான வாழ்க்கை நடத்தக் காண்கின்றோம். ஏன்? போதிய முயற்சியில்லையா? போதிய விருப்பமில்லையா? போதிய அறிவு இல்லையா? தக்க முயற்சியும் விருப்பமும் அறிவும் இருந்தாலுங்கூடப் பலரால் முன்னேற முடியவில்லையே. ஏன்? வள்ளுவர் கண்டுபிடித்த ஒரு காரணம் எண்ணியது உடனே கைகூடாவிட்டால் பலர் பெருஞ் சோர்வடைந்துவிடு கின்றனர். ஓரிரு காரியங்கள் தோல்வியானாலும் வாழ்க் கையே தோல்வி என்று மதிமயங்குகின்றனர். சிறிய ஏமாற்றங்களைப் பெரிதுபடுத்தி அவலப்படுகின்றனர். தம் ஆற்றலுக்கு மிகையான காரியங்களை மேலிட்டுக்கொண்டு வீணே அல்லற்படுகின்றனர். எண்ணிய பதவி கிடைக்கா விட்டாலும்,பதவியுயர்வு கிடைக்காவிட்டாலும்,பல்லாண்டு இருந்த பதவி இல்லையானாலும், எதிர்பார்த்த இலாபம் வராவிட்டாலும், இலாபக்குறி சிறிது குறைந்தாலும், பலர் மனம் நிலைகொள்ளவில்லை. வணிகத்திலும் பதவியிலுமே யன்றிக் குடும்பவுறவுகளில் ஏமாற்றங்களும் எதிர்ப்புக்களும் சோர்வுகளும் அலையலையாக வந்து கொண்டிருக்கின்றன. சுருங்கக்கூறின் நூற்றுக்குத் தொண்ணூறு பங்கு மக்கள் ஏதோ ஒரு வகையில் சோர்ந்த வாழ்கையைத்தான் நடத்திக்கொண்டிருக்கின்றனர். இவர்களையெல்லாம் நன்றாக வாழுங்கள் என்று ஊக்கப்படுத்தும் நோக்கோடு, இடுக் கண் அழியாமை என்றே ஒரு புதிய அதிகாரம் கண்டார் வள்ளுவர்.

ஏன் ஒவ்வொருவரும் மனக் கலகலப்பாகவும் உடற் குதுகுதுப்பாகவும் இருக்கக் கூடாது? நன்றாக வாழ்வதற்கு என்ன குறைவு? தேவையின்றியும் காரணமின்றியும் சோர் வடைதல் எனபது மக்கட்குத் தீய பழக்கமாகிவிட்டது. துன்பத்தின் உண்மையான மெய்ம்மை என்ன?

இன்பம் விழையான் இடும்பை இயல்பென்பான்
துன்பம் உறுதல் இலன். (628)

எவனுக்குத் துன்பம் இல்லே? எவன் துன்பத்தை வாழ்வில் இயல்பு என்று விளங்கிக்கொள்கின்ருனே அவ்விளங்கிக்குத் துன்பம் இல்லே என்பர் வள்ளுவத்தோன்றல். நில வளர்ச் சிக்குக் குழி தோண்டுதலும் பள்ளம் படுத்தலும் வேண்டு மாப்போல, வாழ்க்கை வளத்துக்குப் பல்வகைத் துன்பங்கள் அடிக்கடி கட்டாயம் தேவை. நுண்ணிய வேர்முனேகள் எப்படியோ கற்களின் இடுக்கிற் புகுந்து துளேத்து மதில்மேல் இறுமாந்து நிற்கக் காண்கின்ருேம். மண்ணிற் கிடவாமல் மதிலிற் கிடக்கின்ருேம் என்று அவ் வேர்கள் உணங்கி விடுவதில்லே. வளரும் வழியைக் கண்டுபிடிக்கின்றன. வண்டி மேட்டுப்பாதை ஏறும்போது தளராமல் காளேகள் மூச்சடக்கி மேலேறுகின்றன. வெள்ளத்தால் எறும்புக் குழிகள் மூடப்பட்டாலும் புதிய குழிகளே எறும்பினங்கள் உண்டாக்கிக் கொள்கின்றன. ஆதலின் இடையூறுகள் என்பவை உயிராற்றல்களே வேகமாக வெளிப்படுத்தும் வாழ்க்கைக் கூறுகள் என்று புரிந்துகொள்ள வேண்டும்.

'துன்பத்தை வரவேற்க' என்பது வள்ளுவர் அறிவுரை. வாழ்வு ஒளிபெற வேண்டுமாயின், புதுப்புதுத் துன்பங்கள் சுடச்சுட வந்து தாக்கவேண்டுமாம். பொன் ஒளிபெறுவது புடம்போடுவதாலன்ருே என்று சுட்டிக்காட்டுவர்.

வெள்ளத் தனேய இடும்பை அறிவுடையான்
உன்னத்தின் உள்ளக் கெடும் (622)

பெரிய துன்பங்கள் வரட்டுமே. அவை மனிதனே என்ன செய்யமுடியும்? துன்பம் இயல்புதானே என்ற மெய்யறிவு மனிதனுக்கு இருந்தால், துன்பத்தைக் கேவலம் துன்பம் என்று அஞ்சியோடாது, ஏதோ நன்மை செய்ய வந்த இன்பம் என்று எண்ண வேண்டுமாம். 'இன்னுமை இன்பம் எனக்கொளின்' என்று வள்ளுவர் துன்பத்தின் மெய்ம் மையை யார்க்கும் புரிய வைத்துள்ளார்.

நாம் துன்பம் என்று நினைத்துக் கொண்டிருப்பன எல்லாம் உண்மையில் துன்பங்கள் அல்ல. சிறு பொறுமை கூட இன்றி எதற்கும் துன்பப்பெயர் சூட்டுகின்றோம். சிறிது தொலை நடப்பதையும், ஒரு காரியத்துக்குக் காத்துக் கொண்டிருப்பதையும், கூட ஒருமணி அரைமணி வேலை பார்ப்பதையும், குழாய்த் தண்ணீர் கொண்டு வருவதையும், கிணற்றில் நீர் இறைப்பதையும், சிறுசுமை தூக்குவதையும், சிறு தாமதங்களையும் துன்பமெனப் பெருஞ் சோர்வு கொள் கின்றோம். கால்வாய் அலையைக் கடலலையென மயங்கு கின்றோம். வாழ்வில் துன்பம் என வருபவை மிகச்சிலவே. எது துன்பம்? எது அளவிறந்த முயற்சியைப் பெருக்குமோ, எது அறிவைப் பெருங்கூர்மையாக்குமோ, எது மனத்தைப் பண்படுத்துமோ, சுருங்கச் சொல்லின், எது வாழ்வை ஆலமரம்போல விரிவாக்குமோ அதுவே துன்பம் எனப்படும். அத்தகைய நல்ல இனிய துன்பம் கிடைப்பது வாழ்வுப்பேறு. ஆதலின் வாழ்வாங்கு வாழ விரும்பும் ஒவ்வொருவரும் பொய்யான துன்பப்போலிகளைத் தள்ளி, வளமான துன்பங்களை வரவேற்பார்களாக.

### 3. சொல்லொழுக்கம்:

மனிதப்பிறப்பு மிக உயர்ந்தது. அவ்வுயர்வுக்கு ஒரு காரணம் மக்கள் பேச்சாற்றல் பெற்றிருப்பது.

குயில் கூவுகின்றது, காக்கை கரைகின்றது, குதிரை கனைக்கின்றது, நாய் குரைக்கின்றது. கூவுதலும் கரை தலும் கனைத்தலும் குரைத்தலும் இன்ன இனம் என்று காட்டும் அஃறிணைக் குரல்களே. அக்குரல்களுக்குச் செய்திப் பொருளில்லை. மனித இனத்துக்கும் ஒரு தனிக் குரல் உண்டு. அக்குரல் ஒலிப்பது மட்டுமில்லை; பேசவும் செய் கின்றது, மனிதன் ஏன் பேசுகின்றான்? தன் கருத்தை மற்றவர்களுக்குத் தெரிவிப்பதற்காகப் பேசுகின்றான் என்று பொதுவாக நினைத்துக்கொண்டிருக்கின்றோம். மொழியின் நோக்கம் கருத்துப் பரிமாறிக் கொள்வதன்று, காரியம் பரிமாறிக் கொள்வது. செய்தி தெரிவிப்பதற்காகப் பேச

வில்லை. மக்கள்வாய் செய்தித்தாள் இல்லை. செய்தியைச் சொல்லிச் சில காரியம் முடித்துக் கொள்வதற்காகப் பேசுகின்றோம். இதுவே மொழியின் பயன்.

காரியம் முடித்துக் கொள்வதற்குப் பேச்சு வேண்டும் என்றால், அப்பேச்சுக்கு ஒரு நற்பண்பு வேண்டும். தண்ணீரால்ன்றி வெந்நீரால் பயிர் விளையாது. இன்சொல்லாலன்றி வன்சொல்லால் காரியம் முடியாது.

நயனீன்று நன்றி பயக்கும் ; பயனீன்று
பண்பின் தலைப்பிரியாச் சொல் (97)

என்ற குறளால் பேச்சுக்குப் பண்பு வேண்டும். பண்பு என்ற தடத்தினின்று பேச்சு என்ற நடைவண்டி விலகக் கூடாது என்று வலியுறுத்துவர் வள்ளுவர்.

பேச்சுப் பண்பு என்பது என்னை ? பிறரை இகழாமை; இழிந்த சொற்களால் ஏசாமை. திருக்குறள் பல அறங்களைப் பலபட மொழிந்தாலும், எல்லா அதிகாரங்களிலும், குருதியோட்டம்போல ஓடுகின்ற ஒரு பொதுவறம் உண்டு. அதுதான் பேச்சொழுக்கம். யாரிடத்துப் பேசினாலும் எந்நிலையிற் பேசினாலும் பணிவுடையன் இன்சொலனாதல் வேண்டும். இதுதான் நன்மனிதன் என்பது காட்டும் நாகரிக அடையாளம்.

நம் வாழ்க்கையில் நாள்தோறும் எவ்வளவு உரையாடுகின்றோம், எத்துணை மக்களோடு சொல்லாடுகின்றோம், எது எதற்கெல்லாம் பேச்சுத் தொடுக்கின்றோம். பாலும் பருவமும் வேறுபட்ட, மொழியும் நிலையும் வேறுபட்ட, அறிவும் அன்பும் உணர்ச்சியும் வேறுபட்ட மனித குலங்களோடு பழகுகின்றோம். நா என்னும் துடுப்பால் மொழி என்னும் நாவாயை ஓட்டிக்கொண்டு மனிதப் பெருங் கடலில் வாழ்வுக் கரைகாண மிதக்கின்றோம். மொழித் தெப்பம் நன் முறையில் புரையின்றி இயங்கவேண்டும் என்றால், வள்ளுவர் கூறுவதுபோல யார்மாட்டும் இன்புறும் இன்சொல் வேண்டும். பண்பற்ற பேச்சு படியற்ற இல்லத்தையும் அடியற்ற உடலையும் ஒக்கும்.

மனிதவுறவு என்பது பேச்சுறவு. நண்பர்கள்தானே என்று நண்பர்களைக் கேலி செய்யக்கூடாது. பகைவர்கள் என்றும் பகைவர்கள் அல்லர். ஆதலின் அவர்களையும் ஓயாது இகழ்ந்து சிறுசொல் சொல்லக்கூடாது. நண்பர்களை எஞ்ஞான்றும் நண்பர்களாக வைத்துக்கொள்ள வேண்டும். பகைவர்களையும் நண்பர்களாக்கிக்கொள்ளும் முயற்சி வேண்டும். இதற்கு ஒரேவழி பேச்சில் இகழ்ச்சியின்மை.

நகையுள்ளும் இன்னாது இகழ்ச்சி; பகையுள்ளும்
பண்புள பாடறிவார் மாட்டு. (995)

கேலி செய்வாரை வெறுப்பது எவ்வுயிர்க்கும் பொதுக் குணம். ஆதலின் இழிசொல் சொல்லாதவர்க்கு மனித வுறவு பெருகும், மனித நாட்டம் வளரும்.

இன்றைய நம் உலகம் பெரும் பகுதி பேச்சுலகம். பேச்சுமுறை ஆட்சிமுறையில் ஒன்றாகிவிட்டது. குழூஉக் குழூஉவாகக் கூட்டம் கூட்டமாக மனிதவுறவு செறிவடை கின்றது. கூட்டுறவும் நாட்டுறவும் பெருகுகின்றன. கருத்து வேற்றுமைகளும் கொள்கைப் பூசல்களும் எதிர் குதிரா கின்றன. எழுத்தாலும் சொல்லாலும் இகழ்கலை கூத்தாடும் இந்நாளில், பேச்சொழுக்கம் பெரிதும் தேவைப்படுகின்றது. தன்னைப் பிறர் மதிக்கவேண்டும் என்ற ஆசை இல்லாதவன் உண்டா? அவ்வாசை நிறைவேறுவதற்கு ஒரேவழி இன் சொல்லால் தான் பிறரை மதித்தல். மதிப்பு என்பது சமுதாயத்தில் ஒருவகைப் பண்டமாற்று. மதிப்புக்கொடுத்து மதிப்புப் பெறல் வேண்டும். அம்மதிப்பு என்பது நாவினைப் பொறுத்தது.

ஏனை உயிரினங்கட்கு உண்ணப் பயன்படும் நா மனித னுக்குச் சொல்லவும் பயன்படுகின்றது. சிறு சொற்பேசிப் பிறரை வடுப்படுத்தும் கொடுநாவாக இல்லாமல், இன் சொல் மொழிந்து யாவரையும் அணைக்கும் செந்நாவாக விளங்கவேண்டும். நம்மிற் சிறியரையும் இகழக்கூடாது. நம்மைச் சின்னவன் என்று தூற்றித் தூண்டியபோதும் இழிவுரை வரக்கூடாது.

தன்மதிப்பு என்பது தன் நாவின் மதிப்பு. தற்பண்பு என்பது தன் நாவின் சொற்பண்பு. தன்னுடைமை என் பது தன் நாவின் அடக்கமுடைமை. 'என் நாவிலிருந்து இழிசொற் பிறவாது. என் நா எதிரியையும் இழிவு பேசாது. என் நா நிறத்தாலும் செந்நா; தரத்தாலும் செந்நா'. இதுவே உண்மை மனிதனின், உயர்ந்த குறிக் கோள். இது அரிய குறிக்கோளாயினும் தன் மனிதப் பிறப்பை மதிப்பவனுக்கு உரிய குறிக்கோளாகும்.

யாகாவா ராயினும் நாகாக்க; காவாக்கால்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு. (127)

நாகாக்க என்பது பொய்யில்புலவர் முடிவாகக் கூறும் பெரிய எச்சரிக்கை. பிறரை இகழ நா வளையும்போது இவ்வெச்சரிக்கையை நினைவுகொண்டு அடங்குவோமாக.

# 7. இலக்கியக் கலை

எண்ண விரிவு :

வாழ்வு என்பது எண்ணத்தால் அமைவது. நல்லெண்ணத்தால் வளர்வது, அல்லெண்ணத்தால் வீழ்வது. எவ்வகை வாழ்வுக்கும் எண்ணங்களே மூலங்கள். எண்ண விரிவு செயல் விரிவாக வாழ்வு விரிவாக முகிழ்க்கின்றது. அதனுற்றான் மனம் போல வாழ்வு என்று பழமொழிகின்றோம்.

எண்ணத்தை விரிவடையச் செய்வது எப்படி ? அதற்கு என்ன துணைகள் வேண்டும் ? தானே சிந்தனை செய்து செய்து எண்ணச் செல்வத்தைப் பெருக்கிக் கொள்ளலாம்; சிந்தனையாளர்களோடு உறவாடி எண்ணப் பயிரை வளர்த்துக் கொள்ளலாம். தற்சிந்தனையால் ஓரளவு தான் எண்ணம் பெருகும், நாம் பழகும் சிந்தனையாளர் எண்ணச் சுருக்கம் உடையவர்களாக இருப்பின், நம் சிந்தனை வளமும் சுருங்கிவிடும், ஆதலின் விரிந்த எண்ணங்களுக்கு விரிவுதரும் பொருள்களை நாடவேண்டும். எண்ணம் விரிந்தால் மட்டும் போதாது. விரிவில் ஒழுங்கும் உரமும் பண்பும் வேண்டும். ஒழுங்கில்லா உரமில்லாப் பண்பில்லா எண்ண விரிவு தனக்கும் அழிவு, தன்னைச் சார்ந்தார்க்கும் அழிவு.

அமைதியான, ஆற்றலான, ஒருமையான எண்ண வளர்ச்சிக்குக் கலைகளே சிறந்த பற்றுக்கோடு. இயல், இசை, நாடகம், ஓவியம், சிற்பம் முதலான கலைகள் தீய எண்ணங்களைக் கலைக்கின்றன. அலைந்து திரியும் நினைவுகளை ஒருமைப் படுத்துகின்றன. ஓடிப் பாயும் அளவிறந்த உணர்ச்சிகளை அளவுபடுத்துகின்றன.

வெள்ளத்தில் பெருக்கைப்போல் கலைப்பெருக்கும்
கவிப்பெருக்கும் மேவு மாயின்
பள்ளத்தின் வீழ்ந்திருக்கும் குருடரெல்லாம்
விழிபெற்றுப் பதவி கொள்வார்

என்ற பாரதி பாட்டு இன்று மக்கள் கலையுணர்வின்றிக் குருடராகக் கிடக்கின்றனர் எனவும், எல்லோரும் விழிபெறக் கலைகளும், கவிகளும் வெள்ளம்போற் பெருக வேண்டும் எனவும் அறிவுறுத்துகின்றது.

## இலக்கியக் கலை :

பல கலைகளுள் இலக்கியக் கலை சிறந்த பல கூறுகள் உடையது. இசைக் கலை உணர்ச்சியைத் தூய்மைப் படுத்தும்; ஓவிய சிற்பக் கலைகள் உணர்ச்சியை ஒருமைப் படுத்தும்; நாடகக் கலை எவ்வுணர்ச்சியையும் இன்பப் படுத்தும். ஆனால் இசை முதலிய கலைகளுக்கு எண்ணத்தை விரிவுபடுத்தும் தன்மை இலக்கியக் கலைக்குப் போல இல்லை. இசைக்கலை குரல் சார்ந்தது ; நாடகக் கலை மெய் சார்ந்தது. ஓவியம் சிற்பம் முதலான கலைகள் புறப்பொருள் சார்ந்தவை; இலக்கியக் கலை ஒன்றே மொழி சார்ந்தது. அதனாற்றான் பாரதியார் இலக்கியமும் ஒரு கலையாயினும் அதனைத் தனியாக விதந்து 'கலைப்பெருக்கும் கவிப்பெருக்கும்' எனப் பாடி வைத்தார். மொழி மனிதப் பிறப்புக்கு உரிய தனியுடைமை. எண்ணம் மொழித்துணையின்றி வளராது. எண்ண விரிவுக்கு மொழி விரிவும், மொழி விரிவுக்கு இலக்கியப் பயிற்சியும் வேண்டும்.

இலக்கியம் என்பது ஆயிரம் ஆயிரம் ஆண்டு பலர் எண்ணங்களின் பேழையாகும். காலந்தோறும் அப்பேழை பெருகுகின்றது. ஏனைக் கலைகளிலும் இலக்கியம் வாழ்வொடு பொருந்திய கலையாதலின், இலக்கியம் கற்கக் கற்க வாழ்வில் விளக்கம் ஏற்படுகின்றது. பலர் வாழ்க்கையொடுபட்ட பல் நிகழ்ச்சிகளையும் பல்லுணர்ச்சிகளையும் நமக்குக் கற்பிப்பது மாத்திரம் இலக்கியமன்று; இலக்கியத்

தின் சிறந்த கூறு புலவனின் எண்ணங்கள். நிகழ்ச்சிகளை யும் உணர்ச்சிகளையும் எப்படி ஆராய்கின்முன், எப்படி ஒதுக்குகின்முன், எப்படி வரவேற்கின்முன், எப்படி வழி காட்டுகின்முன் என்பது இலக்கியம். எப்படி நம்மை எண்ண வைத்து நம்மிடம் எண்ணங்களைப் பெருக்குகின் முன் புலவன் என்பதுவே இலக்கியக் கலை.

## குறிக்கோள்

உலகில் எவ்வுயிரும் துன்பத்தை விரும்புவதில்லை; துன்பம் செய்யும் உயிரையும் விரும்புவதில்லை. சில குறிக் கோள்களுக்காகத் துன்ப வரவைத் தாங்கிக் கொள்பவர் களுங் கூட. அத்துன்பத்தால் குறிக்கோள் நிறைவெய்தும் இன்பத்தைக் காண்கிமுர்கள். அதனுல் குறிக்கோள் வழிப்பட்ட துன்பம் இன்பமாக மாறுகிறது. ''நரகம் புகினும் எள்ளேன் நின் திருவருளாலே இருக்கப்பெறின் இறைவா'' என்று மணிவாசகர் இறைவன் அருளொடு கூடிய நரகத்தை இன்பமாக மதிக்கின்முர்.

கடுங்கதிர் வெம்மையிற் காதலன் தனக்கு
நடுங்குதுயர் எய்தி நாப்புலர வாடித்
தன்துயர் காணுத் தகைசால் பூங்கொடி;
இன்றுணை மகளிர்க் கின்றி யமையாக்
கற்புக்கடம் பூண்டவித் தெய்வ மல்லது
பொற்புடைத் தெய்வம் யாங்கண் டிலமால்

(சிலப். அடைக்.)

இளைய மெல்லிய கண்ணகி மதுரைக்கு நடந்தபோது கடு வெப்பம் தாக்குதலை அறியாள்; தன் கணவன் இவ்வெப் பத்தை எங்ஙனம் பொறுப்பானே என்று வருந்தினுள் என்பர் இளங்கோ. யாருக்கு யார் வருந்துகிமுர்கள் என்று பாருங்கள். ஏன்? கண்ணகியின் குறிக்கோள் கற்பு என்பது. பெண்ணுக்குக் கற்பு என்பது இல்லறத்து வரும் துன்பத்தை யெல்லாம் பொறுத்தலும், கணவனுக்கு வரும் துன்பத்தைப் பொமுமையும் ஆம். இக்குறிக்கோளால்

முதுவேனில் வெம்மையும் கொப்புளம் பட்ட குதிகாலும் கண்ணகி நங்கையைத் தாக்கவில்லை ; துன்பம், குறிக் கோளின் வழிப்படும் போது இன்பமாக மாறுகின்றது.

ஈண்டு நானிருந்து இன்னுயிர் மாயினும்
மீண்டு வந்து பிறந்துதன் மேனியைத்
தீண்ட லாவதோர் தீவினை தீர்வரம்
வேண்டினுள் தொழு தென்று விளம்புவாய்

(சுந்தர. சூளா.)

அசோகவனத்தில் அநுமன்முன் சீதை கூறிய குறிக்கோள், காமுகப் பகைவன் நாட்டில் சிறை வைக்கப்பட்டுச் சிறை யிலேயே இறந்தாலும், இறந்துபோம் பெருந் துன்பம் எம்தினுலும், அத் துன்பத்துக்கிடையே சீதை வேண்டும் வரம் என்ன ? மீண்டும் இராமன் தன் கணவனுகவும் தான் அவன் மனைவியாகவும் பிறந்து திருமேனி தீண்ட வேண்டு மாம். தீண்டப்பெற்றுலல்லது சிறையிலிருந்த தீவினை நீங்காதாம் என்று வருபிறப்புக்கும் குறிக்கோள் தொட ருகின்றுள். இராமனைக் காணலாம் ஒரு நாள் ஒரு கணம் என்ற ஆசையால் போகும் உயிரைப் பிடித்து வைத்துக் கொண்டிருக்கின்றுள். குறிக்கோளால் வந்த இன்னுமை இள்பமாக விளங்குகின்றது.

இதந்தரு மனையின் நீங்கி
இடர்மிகு சிறைப்பட் டாலும்
பதந்திரு இரண்டும் மாறி
பழிமிகுத் திழிவுற் ருலும்
விதந்தரு இன்னல் கோடி
விளைந்தெனை நலிந்திட்டாலும்
சுதந்திர தேவி! நின்னைத்
தொழுதிடல் மறக்கி லேனே

இன்று நாம் பெற்றுள்ள நாட்டின் விடுதலைக்காகத் தம் பதவியைத் தம் பொருளைத் தம் உயிரைத் துறந்தோர் எத்துணை எத்துணையர்? அவர்தம் வாழ்வின் இழப்புக்கும்

வருத்தத்தின் பெருக்கத்துக்கும் எல்லையுண்டா ? 'இன்பம் என்பது உரிமை ; துன்பம் என்பது உரிமையின்மை' என்பது நாட்டுத் தொண்டர்களின் குறிக்கோள். அதனுல் மாடாக நின்று செக்கிழுத்தலை வரவேற்றனர். சிறிய சிறைக் குள் முடங்கி ஒடுங்கிக் கிடப்பதை இது ஒருநாள் உரிமை விரிவாகும் என்று கருதினர். தம் பதவியிழப்பு பாரத மகளுக்கு உரிமைப் பதவியை அளிக்கும் என்று உவந்தனர்.

இவ்வாறு இலக்கியக் கலை இன்ப துன்பம் பற்றிய புலவர்களின் கருத்துக்களை நமக்கு வழங்குகின்றது. வாழ் வில் இன்பதுன்ப வயப்பட்ட நாம் இக் கருத்துக்களைப் படிக்கும்போது, குழந்தை வளர்ப்புக்குப் படும் துன்பமும் குடும்பத்துக்குப் படும் துன்பமும் துன்பமல்ல, குடிநலத் துக்கு இயல்பில் அமைந்த இன்பங்கள் என்று சிந்திக்கின் ருேம். குடி மேன்மேலும் வளர எவ்வளவு துன்பப்படவும் தகுதிப் படுத்திக்கொள்கிருேம். குழந்தைகளுக்கும் எதிர் கால நலத்துக்குத் துன்பப் பயிற்சி கொடுக்கிருேம். துன்பம் என்பது முடிவில் இன்பத்தின் வழிகாட்டி என்று ஊக்கங் கொள்கிருேம். எவ்வகைத் துன்பமும் இறுதியில் இன்ப நலமாக முடியும் என்ற உலக வியல்பை அறிந்தே.

எல்லா உயிர்க்கும் இன்பம் என்பது
தானமர்ந்து வரூஉம் மேவற் ருகும் (1168)

என்று முடிப்பர் தொல்காப்பியர். ஆதலின் பல்வேறு கருத்துக்கள் தரும் இலக்கியக் கலை, எண்ணத்தை விரிவு படுத்தும் இன்பக் கலை என்று தெளியலாம்.

# 8. குறளணிகள்

சிலப்பதிகாரம் பெரியபுராணம் இராமாயணம் போலத் திருக்குறள் காப்பியம் இல்லையே; தொடர் நிலைச் செய்யுள் கொண்டதில்லையே; கதை பொதி பொருளும் இல்லையே; தன்னிகரில்லாத தலைவனுக்கோ தலைவிக்கோ கூற்றுக்களுக்கோ இடனில்லையே; இயற்கைப் புனைவுக்கும் கற்பனை முனைவுக்கும் உரையாடல் நயத்துக்கும் வாய்ப்பில்லையே. மிகச் சிறிய செய்யுட்கள், தொடர்பு ஓடாத் தனித்தனிக் குறள்கள். இப்படிச்செய், அப்படிச் செய்யாதே என்று அறம் சொல்லும் கட்டளைப்பாக்கள். இப்போக்குடைய திருக்குறளில் இருக்கமுடியுமா அணியழகு? பாறையில் பசும்புல்லா? இவ்வாறு எண்ணக்கூடும், நகையாடக் கூடும் இலக்கிய மேலோடிகள்.

இலக்கிய வரலாற்றில் நாம் அறியக்கிடப்பது சங்க இலக்கியங்கட்கு முன் உள்ள ஒரே முழுநூல். ஒருவரால் இயற்றப்பட்ட தனிநூல் தொல்காப்பியம் என்பது. தொல்காப்பியம் இலக்கணத்தன்மை செறிந்த இலக்கியம் ஆகும். சங்க இலக்கியத்தை அடுத்து எழுந்த ஒரு முதல் நூல், ஒருவர் ஆக்கிய தனிப்பெருநூல் திருக்குறள். திருக்குறள் இலக்கியத் தன்மை மிகுந்த வாழ்விலக்கணப் பனுவல். சிலப்பதிகாரம் முதலான பெருங்காப்பியத் தனிநூல் எல்லாம் திருக்குறளுக்குப்பின் எழுந்தன என்பது மட்டுமன்று, சொல்லாலும் பொருளாலும் பொருளைச் சொல்லும் போக்காலும் திருக்குறளை முன்வைத்து எழுந்தன என்றும் அறியவேண்டும். திருக்குறளின் தொடக்கமே அணியழகு பொலிந்தது. 'அகர முதல எழுத்தெல்லாம்' என்ற முதற் குறளின் முதலடியை அறியாதார் யார்? தொடக்கமே அணியாக இலங்கும் ஒரு நூலில் உள்ளணிகளுக்குப் பஞ்ச

மிராது. வாசலில் இனிப்பு வழங்குவார் இல்லயில் எவ்வளவோ இனிப்புக்கள் படைப்பர். இவ்வுலகியல் இலக்கியலுக்கும் பொருந்தும்.

**வள்ளுவ அணி :**

உலகத்தார் போற்றும் அணியை வள்ளுவர் அணியாக நகையாக அழகாக மதிப்பதில்லே. பணிவும் இன்சொல்லும் மக்களணியாம். கண்ணேட்டம் கண்ணுக்கு அணியாம். நாணம் சான்ருேர்க்கு அணியாம். நன்மக்கள் இல்லற அணியாம். குறிப்பறிவான் உலகுக்கு அணியாம். மட நோக்கும் நாணும் பெண்ணுக்கு அணியாம். நாம் விருப்பத் தோடு பெருவிலே கொடுத்து வாங்கும் நகைகள் எல்லாம் அணியல்லவாம். எவையோ பிறவாம். இவ்வாறு உடலணி களே மதியாது புதிய உயிரணிகள் இயம்புவர் வள்ளுவர். இதுபோல வள்ளுவ நூலிலும் புதிய புரட்சி அணியழகு களேக் காணலாம்.

அணியழகு என்பது என்ன? இதுதான் அழகு என்று தெள்ளத்தெளியச் சொல்ல முடியுங்கொல்? முழுக் கூந்த லுக்கு என்ன அழகோ அந்த அழகு முன் குடுமிக்கும் மொட்டைக்கும் உண்டு. யானேக்குட்டியின் வனப்பு பன்றிக் குட்டிக்கு இல்லேயே என்று சொல்லலாமா? அதன் அதனழகு அதன் அதனுக்கு உண்டு. அதுவே இயற்கை. மாறியிருப்பது தான் அழகா? இது ஆராய்தற்கும் ஐயத்திற்கும் உரியது. பாலில் நீரின் தன்மை இருந்தால் அழகு என்று ஒப்புவோமா? பாம்பைக் கண்டு பெண் ஓடிஞல் பெண் தன்மை என்று பாராட்டுவோம். ஆண் ஓடிஞல் பேடி என்றல்லவா பாராட்டுவோம். ஆதலின் எது அணி? தனக்குரிய தன்மை யோடு விளங்குவது அணி.

**தன்மையணிகள் :**

மணிமேகலே யாதொரு அணியும் அணியவில்லே. அவள் அழகைப் 'புனேயா ஓவியம்' என்ருர் சாத்தஞர்.

கண்ணகி எல்லா அணிகளும் இழந்த நிலையழகைச் 'செய்யாக் கோலம்' இயற்கை யழகு என்றூர் இளங்கோ. சீதைக்குத் திருமணத்தன்று பல அணிகலங்களை அணிகின்றூர்கள். ஐயோ! இயற்கையழகை இவைகள் கெடுக்கின்றனவே! அணிமோகம் கொண்ட உலகத்தின் அறியாமை என்னே! என்று அழுங்குகின்றூர் கம்பர். கடவுளர் திருமேனிகள் அணி சாத்தாத நிலையில் தனியழகினவாகக் கண்டு கலையழகென வணங்குகின்றேம். செய்தித்தாளில் விளம்பரஞ் செய்வார் சிலர் வெள்ளைப் பகுதியாக விளம்பரம் கொடுத்திருப்பதைப் பார்த்திருப்பீர்கள். இதனுல் அழகு பற்றி நாம் அறிவது இயற்கை யழகே அழகு. தன்னியல்புக் காட்சி ஓர் அணி. இதனைத் தன்மை யணி என்பர் அணி நூலார்.

தன்மையணிதான் அணிகளில் தாலிபோல உண்மை யணி, முதலணி. தன்மையணி என்பது உள்ளது கூறுதல். உள்ளது கூறுதல் எளிதன்று. உள்ளது கூறுவதுதானே உலகத்தில் கடினமாக இருக்கின்றது.

கற்றதனுல் ஆய பயனென்கொல் வாலறிவன்
நற்றுள் தொழாஅர் எனின் (2)

இறைவனுடைய திருவடியைத் தொழுவதே கல்வியின் பயன். இது கல்வித் தன்மையணி.

அஞ்சுவது அஞ்சாமை பேதைமை; அஞ்சுவது
அஞ்சல் அறிவார் தொழில். (428)

பயப்படுவதற்குப் பயப்படமாட்டேன் என்றல் மடமை; பயப்படுவதற்குப் பயந்து நடத்தல் அறிவுடைமை. இவை பேதைமை அறிவுடைமை பற்றிய தன்மைகள்.

கண்டுகேட்டு உண்டுயிர்த்து உற்றறியும் ஐம்புலனும்
ஒண்டொடி கண்ணே யுள (1101)

கண்ணின்பம் கேள்வியின்பம் உணவின்பம் மணவின்பம் தொடுவின்பம் எல்லாம் ஒரு பெண்ணின்பத்துள் அடங்கிக் கிடக்கின்றன என்பது இன்பம்பற்றிய தன்மையணி.

ஒரு பொருளின் தன்மை காணல் எளிதன்று. அதனைத் துல்லியமாகக் காண்பதற்குத்தான் அறிவியலுலகம் கருவிகள் மூலம் பாடுபடுகின்றது. எவ்வளவோ அருட்பாசுரங்கள் எழுந்துள்ளன என்றாலும், ''தன்மை பிறரால் அறியாத தலைவா'' என்று இறைவனைச் சுட்டுவர் மணிவாசகர். இன்னும் ஒருபடி கூடுதலாகச் சென்று, இறைவன் கூட ஓர் அறியாமையுடையவன். அவனுக்குத் தன் பெருமைத் தன்மை தெரிவதில்லை. ''தன்பெருமை தானறியாத் தன்மையன் காண்'' என்பது மணிவாசகம்.

தன்மைதான் எல்லா அணிகளுக்கும் அடிப்படையணி. நிலமின்றிக் கோபுரம் இல்லை. கூந்தலின்றேல் மலரில்லை. கல்வியின்றேல் ஆராய்ச்சியில்லை. உடலின்றேல் உலகில்லை. திருக்குறள் அறநூலாதலால், வாழ்வுத் தன்மை நுவலும் இயல்பு நூலாதலால், நூல் எங்கணும் தன்மையணிகள் நிரம்ப உள. அதனால்தான் வள்ளுவர்க்குப் பொய்யில் புலவர் என்பது ஒரு பெயர். பொய்யில் புலவர் என்றால் உள்ளதனை உள்ளபடி கூறும் தன்மைப் புலவர் என்பது பொருள்.

தன்மையணி தன்னிலையில் இருந்தால் சுவைபடாது, கவர்ச்சிப்படாது, நெஞ்சையள்ளாது. அணி என்பது இலக்கிய விளம்பரம். எது உள்ளத்தை ஈர்க்கும், எது உணர்ச்சிப்படுத்தும், எது கவர்ச்சியூட்டும், அது அணியாகும். தங்கம் நகையாக, மலர் மலர் மாலையாக, நூல் ஆடையாக, அரிசி சோறாக, கிழங்கு வற்றலாக, அறிவு செயலாக, வனப்புப் பெறவேண்டும் பயன் பெறுதற்கு. தன்மையைத் தன்மையாகக் காட்டல் அறிவியல். தன்மையை அணியாக மாற்றல் இலக்கியம். புலவன் என்னும் கருமான் இலக்கியப் பட்டறையில் தங்கச் சிலம்பினுள் குறிப்பு என்னும் பரல் உள்ளீடு அமைக்கின்றான். குறிப்பொடு கலக்கும்போது தன்மை அணியாக விளங்குகின்றது. குறிப்பில்லாத தன்மை குரல் இல்லாத இசையைப் போல்வது, ஒருமையில்லாத காதலரைப் போல்வது, கவனமில்லாத காதைப் போல்வது.

குறிப்பணிகள்:

திருவள்ளுவர் தெய்வப் புலவராதலின் அவர் செய்த தன்மையணிகள் எல்லாம் குறிப்பணிகளாக இலங்குகின்றன. தன்மையாக இருத்தலின் ஓதற்கு எளிது எனவும், எங்கும் குறிப்புமயம் இருத்தலின் உணர்தற்கு அரிது எனவும் பாராட்டினர் மாங்குடி மருதனர்.

அந்தணர் என்போர் அறவோர்மற் றெவ்வுயிர்க்கும்
செந்தண்மை பூண்டொழுக லான் (30)

எவ்வுயிர்க்கும் அருளுடையவர் அறவோர் என்பது இதன் கருத்து என்றாலும், தன்னுயிரைக் காத்துக்கொள்வதா? பிறவுயிர்களைக் காப்பாற்றுவதா? என்று ஒரு முரண் நிலை வரும்போது, பிறவுயிரை மதிப்பதுதான் அறமாகும். 'மற்று எவ்வுயிர்க்கும்' என்ற மற்றுநடையால் இக்குறிப்பு பெறப்படும். மேலும் அந்தணர் என்பது ஒரு சாதிப் பெயரன்று, குணப்பெயர் என்பது 'அந்தணர் என்போர் அறவோர்' என்ற குறிப்பு மறுப்பாலும் பெறப்படும்.

கடலோடா கால்வல் நெடுந்தேர்; கடலோடு
நாவாயும் ஓடா நிலத்து (496)

தன்மைக் குறிப்பணிக்கு இது ஒரு நல்ல எடுத்துக்காட்டு. மாட்டுவண்டி கடலிற் போகாதாம். கப்பல் நிலத்தில் போகாதாம். குழந்தைத்தனமான கருத்து என்று சொல்லிவிடுவோம். குறளாக இருத்தலாலும் பாடினவர் தெய்வப் புலவர் என்பதனாலும் குகைக்குள் மணிபோலக் குறளுள் அணி யிருக்கும் என்று தேடுகின்றோம். எந்த இடத்தில் எதனைச் செய்வது என்ற அறிவுவேண்டும் என்பது இக் குறளின் கருத்து. இதற்கு நிலவண்டியையும் நீர்க் கப்பலையும் ஏன் காட்டவேண்டும்? எங்கோ தனியாக ஓடுகின்ற வண்டியையும் எத்திசையோ நோக்கிச் செல்லுகின்ற கப்பலையும் கூறவில்லை. இது கடற்கரைச் சந்திப்பு வெளிநாட்டுக்குப் போக்குவதற்காகப் பாரச் சரக்குக்களை வலிய வண்டியில் ஏற்றிக் கடற்கரை நோக்கி வருகின்றனர். கரை

வந்ததும் மேற்செல்லாது வண்டி நிற்கின்றது. சரக்குகள் கப்பலில் ஏறுகின்றன. அது போலவே வெளிநாட்டிலிருந்து கப்பல் வருகின்றது. வந்த கப்பலேத் தரை தட்டாமல் ஆழ் நீரில் நிறுத்திவிட்டுச் சரக்கினேக் கொண்டு வந்து வண்டியில் ஏற்றுப. சந்திக்கும் இடத்தில் இட வேற்றுமை காரண மாக ஊர்தி மாற்றம் ஏற்படுகின்றது. "நீரினின்று நிலத் தேற்றவும், நிலத்தினின்று நீர்ப்பரப்பவும் அளந்தறியாப் பல பண்டம்' என்று சோழநாட்டின் இருமதி வணிகத்தை— நிலநீர்ச் சந்திப்பைப் பட்டினப்பாலே தொடுத்துக் காட்டும். வன்கால் வண்டி கடற்கரை வந்ததும் அப்படியே கடலுள் புக்கோடுவதில்லே; ஓடிவரும் கப்பல் கரைவரை வந்ததும் அப்படியே நிலத்திற் பாய்ந்து விடுவதில்லே என்ற இருமுனே யைக் குறிப்பிக்கவே, தேர் கடலோடா எனவும், கடலோடும் நாவாயும் எனவும் சூழ்நிலே சுட்டி விளக்கினர். கடல் வணி கத்தை நினேவிற் கொண்டு கூறியதோடு, தேர்ப்படை, கப்பற்படைகளேயும் எண்ணிக் கூறியதாகவும் குறிப்புக் கொள்ளலாம். கால்வல் நெடுந்தேர் என்பது போர்க்களத் தேர்ப்படையைக் குறிக்கலாம். 'வைகல் எண்தேர் செய்யும் தச்சன் திங்கள் வலித்த காலன்னேன்' என்பதனே ஒப்பு நோக்குக.

> ஒண்ணுதற் கோஒ உடைந்ததே; ஞாட்பினுள்
> நண்ணாரும் உட்குமென் பீடு (1088)

இல்லறத் தலேவன் தலேவியின் நுதல் அழகு கண்டு இன் புற்ற தன்மையை இக்குறள் காட்டும். நெற்றியழகு தன்னே வெற்றிகொண்டது என்று சொல்லுமளவில் தலேவன் நிற்க வில்லே. இவன் ஓர் மறத்தலேவன். அவன் தமிழ் படைத் தமிழ். இவன் பெருமை எப்படிப்பட்டதாம்? போர்க்களத் துக்கு வந்த இவன் வலிகண்டு தோற்ற பகைவர்கள் மற்ற வர்களுக்கு அதனே எடுத்துச் சொல்லவே அப்பகைவர்களும் போர்க்களம் வாராமலே அஞ்சி வீட்டில் கிடக்கின்றார் களாம். முன்னின்றாரைப் புறங்காட்டிய இவன் பெருமை மற்றவர்களே முன்னிற்க வாராமலே தடுக்கின்றதாம். இது

போர்க்களத்தில், மாலையில் வெற்றியோடு வீடுவந்த இத் தலைவன் தன்னிலையை வீட்டில் வைத்துப் பார்க்கின்றான். புறமும் அகமும் இணையும் தமிழ்க் காட்சி யிது. பளபளப் பான இவள் நெற்றி ஒன்றுக்கே, நெற்றியைக் காட்டிய அளவிலேயே தன் பெருமை முழுதும் உடைந்துவிட்டதே. இனி பிற உறுப்புக்களுக்கு உடைய இடமில்லையே. தன் தானைப்பீடு ஒரு சிறிய முன்தானைக்கு ஓடிவிட்டதே. இப் படியும் பெருவீரனுக்கு ஒரு சிறு தோல்வியா என்பது இவன் வியப்பு. படை புறங்காட்டுதலை உடைதல் என்று கூறுதல் சங்ககாலப் படைத் தமிழ். 'பல்படை ஒருவற்கு உடை தலின்' என்பது தொல்காப்பியம். 'மண்டமர்க்கு உடைந் தனனாயின்' என்பது புறநானூறு. ஆதலின் நுதலுக்கு என்பீடு உடைந்ததே என்று வினைப்படுத்துகின்றான் படைத் தலைவன். பெண்ணுக்குப் பீடாவது கற்பு. கணவன் வரவேண்டிக் காமகோட்டம் தொழலாம் என்றபோது பீடன்று-கற்புப் பெருமையன்று எனக் கூறியமைந்தாள் கண்ணகி. ஆடவனுக்குப் பீடாவது புறங்காட்டாப் போர்ப் பெருமை. பெண் பீடாகிய கற்புக்கும் ஆண் பீடாகிய வீரத்துக்கும் பாயற்களத்து ஊடற்போர் நிகழுங்காலத் தில் ஆண்பீடு தோற்றல் வேண்டும், பெண் பீடு வெல்லவேண்டும். ஊடற்போரில் தோற்றவரே வென்றார் என்பது வள்ளுவ மன்றம். அகத்துக்குப் புறம் பணிவதே அணியழகு.

அணிகளிற் சிறந்தது குறிப்பணியே. இதனை நோக்கு என்பர் தொல்காப்பியர். குறிப்பணிகளே திருக்குறளில் ஏராளமாக இருக்கும்போது ஏனைய அணிகளும் தாராள மாக இருக்கும் என்பதனைக் குறித்துக் கொள்ள வேண்டு கின்றேன்.

எல்லா அணியும் இதிலுள; இந்நூலில்
இல்லாத எவ்வணியும் இல்

என்பது புதிய வள்ளுவமாலை.

## 9. இலக்கிய வெள்ளம்

தமிழ் நிலைபெற்ற தாங்கரும் மரபுடைய மதுரை மூதூரின்கண் தமிழ் வாழவும் தமிழால் நாம் வாழவும் இன்று தலைக்கூடி யிருக்கின்றோம். சங்க நாளில் சேர பாண்டிய சோழ நாட்டுப் புலவர்கள் கூடும் தமிழ் கெழு கூடலாக இம் மதுரை விளங்கியது. பனம்பாரனர் வரையறுத்தபடி, வடவேங்கடம் தென்குமரி இடைப்பட்ட தமிழ்ப் புலமையோரே பண்டு கூடி இந்நகர்க்கண் தீந்தமிழ் ஆய்ந்தனர். 'வடக்கில் இமயமலை தெற்கில் வாழும் குமரி முனை' என்று பாரதி மொழிந்தாங்கு இமய முதல் குமரி வரை தமிழ் வளர்க்கும் புலவர்கள் கூடும் இந்தியத் தமிழ்க் கூடலாக இம் மதுரையை உயர்த்தியிருக்கின்றோம். மக்கள் பதவி உயர்வு பெறுவது போல, மதுரை நகரமும் புகழால் பரந்தோங்கு சிறப்புடையதாகத் திகழ்கின்றது.

மேலைநாட்டுச் சில மொழிகளின் பெருவளர்ச்சியோடு ஒப்பிடுகையில் இன்று நம் தமிழ் வளர்ச்சி ஓரிரு நூற்றாண்டு பிற்பட்டுக் கிடக்கின்றது. தமிழ் அரசாட்சி நடத்தினல் மட்டும் போதாது, அறிவாட்சியும் நடத்தவேண்டும்; கால மொழியாகவும் வேண்டும்; பல்கலைக்கழகங்களிலும் அனைவகைக் கல்லூரிகளிலும் அனை நிலைத் துறைகளிலும் சரி நிலை என்னும் உரிநிலையும் பெறவேண்டும்.

எல்லாந் திருச்செவியில் ஏறும் படியுரைக்க
வல்லாயுன் போலெவர்க்கு வாய்க்குமே

என்று தமிழ்விடுதூது பாராட்டியபடி, எக்கலையையும் ஏறும்படி யுரைக்க வல்ல மொழி தமிழ் மொழி என்பதனை இடைக்கால இலக்கியங்கள் மெய்ப்பித்துவிட்டன. பல துறைகளையும் பாட்டால் இயம்பும் வன்மை ஒரு மொழிக்கு

இருக்குமாயின், உரைநடையாற்றல் பற்றிச் சொல்லவும் வேண்டுமோ? மலையேறிக்குச் செய்குன்று ஏறல் பாரமா?

## துறைமன்றங்கள்:

தமிழ் வளரா, வளரவிடாக் குறைவை யுணர்ந்து அதனைக் குறைவிலா நிறைவாகவும் கோதிலா அமுதாகவும் ஆக்குதல் தமிழ் இலக்கிய ஆசிரியர்களின் கடமை மட்டு மன்று; பிற துறையாசிரியர்களின் பொறுப்பும் ஆகும். தமிழுக்குக் குறைவு இலக்கியமன்று; பல்துறை நூல்களே. இக் குறைவை நிறைவாக்க வல்லுநர் பிறதுறை யாசிரியர் களே. அவர்களை இத்தொண்டுக்கு ஊக்குவதும், சொல்லும் நடையும் காட்டி உதவுவதும் தமிழாசிரியர்களின் கடனாகும். ஆதலின் என் கருத்து பொறியியலாசிரியர் தமிழ் மன்றம், வேதியியலாசிரியர் தமிழ் மன்றம், மருத்துவ ஆசிரியர் தமிழ் மன்றம், வணிகவியலாசிரியர் தமிழ் மன்றம் எனவாங்குத் துறைதோறும் தமிழ் மன்றங்கள் தோன்ற, தோன்றித் துறைக் கட்டுரைகளும் துறைப்பாட நூல்களும் துறைப் பொதுநூல்களும் எழுத, இம்மன்றம் வழி செய்யவேண்டும். ஆர்வலர்களைத் துறைமன்றம் கூட்ட ஊக்கவேண்டும். ஆண்டிகள் கூடிக் கட்டினால் கட்டுவது மடமாக இருக்கும்; அவ்வளவுதான். நாம் கூடி எது வளர்க்க முற்பட்டாலும் அது இலக்கிய வளர்ச்சியாகவே அமையும். தமிழுக்குக் காலத்தினால் செய்ய, செய்விக்க வேண்டிய நன்றி அறிவியல் துறையாக்கமே. தமிழுக்கு உண்மையான குறைவு இது என்பதனை உணர்ந்து, துறைகள் பயின்ற பிற தமிழர்களுக்கு இதனை உணர்த்தி, துறைத் தமிழ் மன்றங்கள் பல தமிழகத் தில் தோன்ற நம் மன்றம் வழிகாட்டுமாக.

## இடைக்காலம்:

கருத்தரங்கின் இரண்டாம் நாளாகிய இன்று இடைக் கால இலக்கியம் பற்றிக் கேட்கக் குழுமியிருக்கின்றோம். தமிழ் இலக்கிய வரலாற்றில் இடைக்காலம் என்பது எது? அக்கால அளவு என்ன? ஏறக்குறைய கி. பி. நாலாம்

நூற்றாண்டு முதல் 19-ஆம் நூற்றாண்டுவரை பதினைந்து நூற்றாண்டுகளை-ஆயிரத்தைந்நூறு ஆண்டுகளை ஒரு சேர இடைக்காலம் என்று வைத்துக் கொண்டிருக்கின்றோம்; பொருந்துமா? இது மறுசிந்தனைக்கு உரியது. ஆங்கிலம் செருமனி போன்ற மேனாட்டு உலக மொழிகள் கிறித்துவுக்குப் பல நூற்றாண்டுக்குப் பின்னரே இலக்கியங்கள் பெற்றவை. இம் மொழிகளும் பண்டை, இடை, இற்றை எனற காலப்பாடு செய்துள்ளன. அவற்றின் இடைக்காலம் இருநூறாண்டு முந்நூறாண்டு அளவினதே. இந்திய நாட்டு மொழிகளிற் பல, சில நூற்றாண்டுகளாகவே, இலக்கியம் உடையவை. ஒரு சில மொழிகளின் இலக்கியத் தோற்றம் மிக அண்மையது. உழக்குக்குள் கிழக்கு மேற்கு என்பது போல, இவைகளும் பண்டைக்காலம் இடைக்காலம் தற்காலம் எனப் பாகுபாடு கொள்கின்றன. எவ்வளவு காலம் வரலாறிருந்தாலும் முக்காலத்துள் அடக்க வேண்டுமா?

நீண்ட நெடிய இடைக்காலம் என்பது தமிழின் தொன்மையை மறைப்பதோடு பலதுறையாக வளர்ந்த தமிழ் வளர்ச்சியையும் கற்பார்க்குத் தோன்றுவாறு மறைத்து விடுகின்றது. ஒரே நீளமாகச் சொல்வதால், இடைக்காலத் தமிழ் வளர்ச்சி புகை வண்டிப் பாதைபோல ஒரே தடமானது. வேறும் வீறும் இல்லாதது என்ற தவறான கருத்து ஏற்படுகின்றது. கன்னித் தமிழ் ஆதலின் என்றும் ஒரே மாதிரியாகத்தான் இருக்கும் என்று நகைக்கலாம் கன்னித் தமிழ், காதலுக்கு மூவாயிரம் ஆண்டுகட்கு முன்பே காப்பியம் கண்டது என்பதனை உணர வேண்டும். தமிழ் உலக மொழியாகப் பரவியும் பரப்பியும் வரும் இக் காலத்தில், இலக்கிய வரலாறும் வரலாற்றுக் காலப்பாடுகளும் தொன்மையும் நன்மையும் துலங்கும் வகையாக அறிவியல் நெறியில் திருத்தி எழுதப் படவேண்டும். ஏனை மொழி இலககிய வரலாறுகளைச் சுவடு ஒட்டித் தமிழ் இலக்கிய வரலாறு எழுதப்படுமேல், அது உண்மை கலக்கிய வரலாறாகவே படும்.

சங்க காலம் தமிழுக்குப் பொற்காலம், சங்க இலக்கியம் தமிழுக்குப் பொன்னிலக்கியம் என்ற கருத்து எல்லார்க்கும் உடன்பாடானவை. இடைக்கால இலக்கியத்தைப் பற்றி நிறைவான கருத்துடையவரும் கொஞ்சம் குறைவான கருத்துடையவரும் உளர். குறைவானது என்ற எண்ணத் தோடு, இடை இலக்கியங்களைப் படிப்பாரும், படிக்க வேண்டா என்ற பகைப்பாரும் உளர். இயற்கை வறட்சி, மானக்கற்பனை, உலகியலின்மை, புராணக் கதை, சமயப் படிவம், அயல்நாகரிகக் கலப்பு, சொற்சிலம்பம் என்ற காரணக் கூறுகளைக் கொண்டு இடைக்கால இலக்கியங்களைக் குறை மதிப்பீடு செய்ப.

**காப்புக் காலம் :**

இலக்கியப் பார்வை என்பது தனிப்பார்வை யன்று; தன் குறுங்கண்ணொடு பார்ப்பதன்று. காலச் சூழலுக்கும் இனவேட்கைக்கும் ஏற்ப இலக்கிய வகைகளையும் இலக்கியக் கூறுகளையும் புலவர்கள் படைக்கின்றனர். மக்களின் மனப்பாங்குகள் மாறுகின்ற திசை நோக்கி இலக்கியம் திசை திரும்பிக் கொள்கின்றது. சமுதாயத்தின் எண்ண நாடி பிடித்து எழுத்துக்கள் ஓடுகின்றன. ஆதலின் இலக்கியப் பார்வை என்பது கால இனப்பார்வை.

சங்க காலம் என்பது உள்ளூர்க்காலம் போர்கள் பல நிகழ்ந்தாலும் அவை மூவேந்தருள் அமைந்த அகப்பூசலே யாகும். சங்க மூவேந்தர்கள் தமிழெல்லையின் புறத்தே சென்று போரிட்டனர். ஆனால் தமிழகத்துள் புறத்தார்க்கு இடங்கொடுக்கவில்லை. புறநானூறு ஓராற்றான் தமிழ் மன்னர்களைப் பற்றிய அகநானூறேயாகும். கம்பர் கூறியது போல அகமாயினும் புறமாயினும் சங்கச் சான்றோர்களின் கவிகள் சவியுறத் தெளிந்து தண்ணென்ற யாற்றொழுக்கு உடையனவாகக் கிடந்தன. 'கவி எனக் கிடந்த கோதாவிரி' கிடந்த என்று பாடுவதால், கொந்தளிப்பின்மை பெறப் படும்.

சங்கப் பிற்காலம் புறத்தார் தமிழகத்தார் ஆன காலம். தமிழும் தமிழரசர்களும் முதன் முதலாகத் தம் தனி முதன்மை இழந்த காலம். சங்கக் கல்விநெறி துண்டிக்கப் பட்டது. உள்ளது காத்தாற் போதும் என்ருயிற்று. சிதறுண்ட செய்யுட்களைத் தேடிச் சிதறுபடாவாறு அழகிய தொகைகளாக்கித் தந்தனர் இடைக்கால முற்காலத்தார். தொகையாக்கிய சான்ருேர்கள் தற்கால உ. வே. சா. போன்றவர்கள். ஆதலின் இடைக்காலம் என்பது சங்கக் காப்புக் காலம் என்று முதலாவது தெளிய வேண்டும்.

**சங்கப் பாட நூல்கள் :**

சங்கத்தொகைகளை இடைக்காலத்தார் காத்தளித்த தோடு நிற்கவில்லை. அவைகளைப் புரிந்து படிப்பதற்கு ஏற்ற வகையில் அகப்பாட நூல் புறப்பாட நூல்களை யாத்துக் குவித்தனர். கோவை நூல்கள் அகப்பாட நூல்களாகும். புறப்பொருள் வெண்பாமாலையின் வெண்பாக்களும் முத் தொள்ளாயிரமும் பரணியும் புறப்பாட நூல்களாகும். இனைய நூல்களில் சங்கக் கருத்துக்கள் மறுவாழ்வு பெற்றன. 'மள்ளர் குழீஇய விழவினுனும் மகளிர் தழீஇய துணங்கை யானும் யாண்டுங் காணேன் மாண்டக் கோனை' என்ற ஆதிமந்தியின் குறுந்தொகைப்பாடல் (31) நம்மாழ்வாரைக் கவர்ந்தது.

> தையனல் லார்கள் குழாங்கள்
> குழிய குழுவினுள் ளும்
> ஐயநல் லார்கள் குழிய
> விழவினும் அங்கங்கெல்லாம்
> கைய பொன்னுழி வெண்சங்கொடுங்
> காண்பா னவாவுவனுன்
> மைய வண்ணு மணியே முத்தமே
> யென்தன் மாணிக்கமே

என்று குறுந்தொகை திருவிருத்தமாக உருவெடுத்தது.

தாயிற் சிறந்தன்று நாண்
நைய லாருக்கந் நாண்தகைசால்
வேயிற் சிறந்த மென்தோளி
திண் கற்பின் விழுமிது

என்ற திருக்கோவை (204) தொல்காப்பியத்தின் ஈகையன்றோ? இங்ஙனம் ஆயிரமாயிரம் சங்கக் கருத்துக்கள் வெவ்வேறு யாப்புவகையில் இடைப்பிறவி எடுத்துள்ளன. ஆதலின் இடைக்கால இலக்கியங்கள் சங்கவழி நூல்களே.

இடைக்காலப் பனுவல்களைச் சிற்றிலக்கியங்கள் என்று சொல்லுகின்றோம். சிறுமையடுத்த இப்பெயர் பெருமைக்கு உரியதாகவும் இல்லை, பெருமை தருவதாகவும் இல்லை. மும்மணிமாலை, இரட்டைமணிமாலை, தசாங்கம், சிலேடை வெண்பா இவைகளும் சிற்றிலக்கியங்கள்; இவற்றோடு ஒப்ப கலிங்கத்துப்பரணி, மூவருலா, முக்கூடற்பள்ளு, குற்றாலக் குறவஞ்சி, நந்திக் கலம்பகம், பாரதவெண்பா இவையும் சிற்றிலக்கியங்களா? திருக்குறளைப் பதினெண்கீழ்க்கணக்கில் ஒன்றாக எண்ணிவரும் மரபுடைய நமக்கு இது சரியென்று பட்டாலும் படும். அளவும் பொருளும் திறமும் பாராமல் பலசரக்குப்போல மொத்தமாகச் சிற்றிலக்கியங்கள் என்று பெயர்ப்படுத்தல் அறிவியலன்று. எண்ணப்படும் நூலினம் ஒரு தரமாக இருத்தல் வேண்டும். 'வரிசை யறிதலோ அரிதே' என்பர் கபிலர்.

## நூல் வளர்ச்சி

இடைக்காலத்தில் தமிழ் வளர்ச்சியில் ஏற்பட்ட புதிய சில கூறுகளை-தள்ள முடியாத சில தமிழ் நலங்களைப் பார்ப்போம். சங்க காலம் தனிப்பாட்டுக் காலம். தொடர்பற்ற தனிப்பாடல்கள் யாப்பதே சங்கப்புலவர் மனமாக இருந்தது. ஒரு பாடல் எழுதி அமைந்த புலவர்கள் பலராகக் காண்கின்றோம். திணைபற்றி நூறுபாடல் அளவு எழுதிய எல்லையை ஐங்குறுநூறு காட்டுகின்றது. நூறுபாடல் என்பது கிட்டத்தட்ட ஐந்நூறு அடிகளாகும். மதுரைக் காஞ்சி, மலைபடு

கடாம் முதலிய நெடும் பாடல்களும் தனிப்பாடல் வகையாகிப் பத்துப்பாட்டில் இருபாட்டுக்கள் என எண்ணப் பட்டன. பெரும்பாலும் சங்கச்சான்றோர் தனிப்பாட் டாசிரியர்களேயன்றி முழு நூலாசிரியர்கள் அல்லர். நூல் நூலாக எழுதும் மனமையை வளர்த்தது இடைக்காலம். ஒரு நூலென்ன பல நூல் எழுதும் ஆசிரியர் பலர் தோன்றினர். கோவை உலா அந்தாதிக்கு ஒட்டக்கூத்தன் என்று பாராட்டப் பெற்றார். நம்பியாண்டார் இரட்டை மணிமாலை, மும்மணிக்கோவை, அந்தாதி, உலாமாலை, கலம்பகம், ஏகாதசமாலை என்றவாறு பத்துப் பிரபந்தங் களைப் படைத்தவராவார். இளம்பூரணர் சேனாவரையர் போலன்றி நச்சினார்க்கினியர் பல்லுரையாசிரியர் ஆனார். இடைக்காலம் வெள்ளம்போல் நூல் நூலாகப் பெருக்கி யிராவிட்டால் தமிழ் இலக்கிய வரலாறு வாழ்ந்து முறிந்த வரலாறாக, குழந்தை கையடக்க நூலாகவே குறுகியிருக் கும். இறையனாரகப் பொருள் உரையும் அடியார்க்கு நல்லார் உரையும் கூறுகின்ற வரலாறளவாகவே நிற்கும். ஆதலின் இடைக்காலம் என்பது தமிழுக்கு இலக்கிய நூலாசிரியர்களைப் பெருக்கிவிட்ட புரட்சிக்காலம்-மழைக் காலம்-என்று உணரவேண்டும்

**பாவினம் - பாவளர்ச்சி :**

இடைக்காலத் தமிழ் வளர்ச்சியில் இன்னொரு பெரும் பயனை-புரட்சியான ஆனால் பொன்னான மாறுதலை நினைப் போமாக இடைக்காலம் யாப்பிற் புரட்சி கண்ட காலம். சங்கயாப்பு திட்பமுடையது, செறிவுடையது, கட்டுக் கோப்பானது, மாற்றத்துக்கு இடந்தராதது. இவ்வமைப்பு மூவேந்தர் தலைமுறையாக ஆண்டு, சங்கக் கல்வி நெறி முறை யாகப் பயின்று வந்த காலத்திற்கு ஏற்றதாக இருந்தது. முற்றும் மாறிய நிலைக்கு ஏற்பத் தமிழை மாற்றி வளர்த்துக் காத்தனர் இடைக்காலச் சான்றோர். இடைக்காலத் தமிழ், நடையழகும் தொடையழகும் பெற்று, எப்பொருளையும் கலகலத்துச் சொல்லும் நெகிழ்ச்சியுற்றது. பாவினங்களையும்,

நூலினங்களையும் பெருக்கித் தமிழினத்தைக் கவியினமாகவே புதுக்கியது. இன்றும் நம் மக்கட்குக் கவியரங்கம் கேட்கும் ஈடுபாடு உண்டு என்றால், திரைப்பாடல் கேட்கும் விழைவுண்டு என்றால் இம்மனப்பான்மை நமக்கு இடைக்கால வழி வந்தது என அறிய வேண்டும்.

பேச்சிலக்கணம் கற்றபின் நாம் பேசத்தொடங்கவில்லை. செவிக்கேள்வி வாயுரையாகின்றது. பேச்சு உரைநடையா செய்யுளா என்பது கேள்விச் சூழ்நிலையைப் பொறுத்தது. இடைக்காலத்தார் நெஞ்சம் செய்யுளாக இருந்தமையின் செய்யுட் சூழ்நிலையே புலவர் குடும்பங்களில் பெருகியிருந்தது. குழந்தைகளை நன்கு படிக்கவைக்க விரும்பிய பெற்றோர், புலவர் குடும்பங்களில் சேர்த்துவிட்டனர். குழந்தையும் கவிதையும் கொண்டாடும் இடத்தில் வளரும் என்ற கருத்து எழுவதாயிற்று. காரிகை கற்றுக் கவி பாடுவது இகழப்பட்டது. பாடங்கேட்பதற்கு முன்பே பாடத்தெரிய வேண்டும் என்ற நிலை எதிர்பார்க்கப்பட்டது. 'குடக்கோடு வானெயிறு கொண்டாற்கு' என்ற வெண்பாவை யாத்துவிட்டுப் பாடங்கேட்டார் சிவப்பிரகாசர். நமக்கு உரைநடைப்பேச்சு எப்படி, அப்படிச் செய்யுள் யாப்பு இடைக்காலத்தார்க்கு. எழுத்து என்பதும் படிப்பு என்பதும் எல்லாம் அவர்கட்குக் கவியே. ஆதலின் நாள்தோறும் பாடிக்கொண்டே இராவிட்டால் யாப்பு வராது என்ற நிலை அவர்கட்கு இல்லை.

''ஆடுங் கடைமணி நாவசை யாமல் அகிலமெங்கும்
நீடுங் குடையைத் தரித்த பிரான் இந்த நீணிலத்தில்''

என்ற ஒட்டக்கூத்தர் பாடும் போக்கைப் பார்த்து, ஒரு கணமுந் தயங்காமல் சிந்தனைக்கு நேரம் கொடாமல், இடைமறித்துக் குலோத்துங்கன்,

''பாடும் புகழொட்டக் கூத்தன்
பதாஅம் புயத்தைச்
சூடுங் குலோத்துங்க சோழனென்றே
என்னைக் கூறுவரே''

என்று இரட்டையர் போலப் பின்னிரண்டடியைச் சேர்த்து முடித்துவிட்டான் என்ருல், இடைக்காலக் கவிதைமனத்தின் இயக்கம் தெள்ளத்தெளியலாம். ‘இம்மென்னும் முன்னே எழுநூறும் எண்நூறும் அம்மென்ருல் ஆயிரம் பாட்டா காதோ’ என்ற வீருப்பு உருட்டுப் புரட்டன்று, கவிதை வெள்ளம் இடைக்காலத்து ஓடிப்பரந்தது.

பயிற்சி நூல்கள் :

எவ்வகைக் கவிதையும் பாடும் வன்மை வேண்டும் என்பதற்காகவே சில சிற்றிலக்கியங்கள் பாவின அடிப் படையில் அமைந்துள்ளன. கலம்பகம் பதினெட்டு உறுப் புடைய இலக்கியம். இதனைப் பாடுவாருக்கு ஏறக்குறைய எல்லாப் பாக்களும் பாவினங்களும் யாக்கத் தெரிய வேண்டும். மும்மணிக்கோவை நான்மணிமாலை இரட்டை மணி மாலை எல்லாம் செய்யுட் பயிற்சி காட்டும் நூல்களே. குறமும் பள்ளும் பாடுதற்கு இயற்பாக்களொடு இசை நாடகப்பாடல்களும் இயற்றத் தெரிய வேண்டும். பரணி பாடுதற்கு நடைவேறுபட்ட தாழிசை இனங்கள் வேண்டும். பிள்ளைத் தமிழ் பாடுதற்குப் பல சீர்கொண்ட நீண்ட விருத்தப் பயிற்சிவேண்டும். பிள்ளைத் தமிழ் என்று பெயர் பெற்றிருந்தாலும் இதன் நடை பல பருவங்களில் பெரு நடையாகும்

யாப்பு வன்மையின் வெறிநிலை சிலேடைப் பாடல் என்க. செம்மொழிச் சிலேடையே அருஞ் செயல். பிரி மொழிச் சிலேடை தமிழ்ப் புலவர்க்கு அரியவென்று ஆகாதவில்லை என்பதற்கு எடுத்துக்காட்டு. புணர்ச்சி யிலக்கணத்தை நம்பியே சிலேடை யாப்பு வளர்ந்தது. இவை பொருளற்றன என்று தள்ளிவிடுதலும் எளிது; பிரித்துப் பதிப்பிக்க இடங்கொடா என்று தூற்றலும் எளிது. பிறமொழிக் கலப்பால் சிலேடை நூல் பெருகிற்று என்ற ஒரு குறையுண்டு என்ருலும், சின்னுளில் எவ்வளவு மொழிப் பயிற்சியைத் தரவல்லது என்று அறிந்தோர்

சிலேடை வெண்பா ஒரு நூலாவது கற்பதையும் கற்பிப்பதையும் உடன்படுவர்.

மற்றிலை யாவி தளரும்
பொழுதுமுன் வந்துநிற்பார்
நற்றிலை யாடக மன்றுடை
யாரன்றி நாமவரைப்
புற்றிலை யாபுக லூரிலை
யாவெனப் போற்றியின்றே
சற்றிலை யாயினுந் தூவுநெஞ்
சேபினைச் சாவில்லையே

(திருப்புகலூரந்தாதி 83)

மனனம் பண்ணுதற்கும் சொற்பயிற்சிக்கும் மொழிப் புணர்ச்சிக்கும் பிரிவிற்கும் சிலேடைபோல் ஆற்றலுடையது வேறில்லை. நூலெல்லாம் ஒரே பயனுடையன அல்ல. ஒரு நூலின் பயன் இன்னொரு நூலிலிருந்து கிடைக்காது. சில நூல்கள் சிறுபயன் உடையன; சில நூல்கள் பெரும் பயனளிப்பன என்றாலும் சில்லறை வணிகம் தொகை வணிகம்போல எல்லா நூலும் கல்விச் சமுதாயத்துக்கு ஒவ்வோர் பருவத்தில் இன்றியமையாதவை.

பனடைப்பு மனம்:

இடைக்காலக் கல்வியாளர்க்கு யாப்பு மனம் மிக்கிருந்தன்மையின் புதுப்புது யாப்புகள் படைத்தனர். அப்படைப்புக்களுள் சிறந்த ஒன்று காரிகை என்னும் கட்டளைக் கலித்துறையாகும். இது வெண்பாவும் வெண்பாவினமும் கலந்தது. ஓரடிக்குள் தளை இருந்தாற்போதும். ஓரடியின் இறுதிக்கும் வரும் அடியின் முதலுக்கும் தளைபார்க்க வேண்டா. இப் புதுயாப்பு கோவை நூல் வளர்ச்சிக்குப் பயன் பட்டது. இந்த யாப்பில் மக்கட்குக் கவர்ச்சியிருந்ததாலன்றோ யாப்பருங்கலக் காரிகையும் வீரசோழியமும் கட்டளைக் கலித்துறையில் செய்யப்பட்டன. திருமந்திரச் செய்யுட்கள் கலிவிருத்தம் என்ற பெயர் பெற்றாலும்

அவ்வளவும் சீரும் தளையும் சிதையாத வெண்பாத் தன்மையன.

என்பே விறகா இறைச்சி யறுத்திட்டுப்
பொன்போற் கனலிற் பொரிய வறுப்பினும்
அன்போ டுருகி அகங்குழை வார்க்கன்றி
என்பொன் மணியினைக் காண வொண்ணுதே

இவ்வாறு சீர் தளை அடி முதலியவற்றை மாற்றியமைத்து இனியும் புது யாப்புக்களைப் படைக்கலாமா என்பது பற்றிச் சிந்தனை செய்யவேண்டும். இத்தகைய இலக்கியக் கண்டு பிடிப்புக்கள் தமிழின் மேல் வளர்வுக்குத் தேவை.

**நல்லமைப்புக்கள் :**

இடைக்கால இலக்கியங்கள் மிக நல்ல அமைப்பு உடையவை என்பது என் கருத்து. இவ்வமைப்பை அறிவான முறையில் பயன்கொள்ள வேண்டும். கோவை, கலம்பகம், உலா, பரணி இவற்றில் பாட்டுடைத் தலைவர் கள் உண்டு. இவர்கள் மானிடத் தலைவர்களாக இருக்கும் போது, இவ்விலக்கியங்கள் உலகியலும் வரலாறும் தழுவு கின்றன. கடவுளர்களைத் தலைவர்களாகக் கொள்ளும் போது உலகியலும் வரலாறும் இழக்கின்றன. கலிங்கத்துப் பரணி முற்சோழ வரலாறும் முதற் குலோத்துங்க சோழன் வரலாறும் அறிய உதவும் இவ்வுலகப் பரணியாகும்.

இராச பாரம்பரியம் என்ற உறுப்பு வரலாறு சொல்லு தற்கே எழுந்தது. தக்கயாகப் பரணி, அஞ்ஞவதைப் பரணி, மோகவதைப் பரணியெல்லாம் புராணமாகவும் உருவக மாகவும் மாறி அவ்வுலகப் பரணியாகிவிட்டன. இவை யெல்லாம் பரணியாகுமேல், கரன்வதைப்படலம் கும்ப கருணன்வதைப் படலமெல்லாம் காப்பியப் பரணிகள் ஆகாவா ?

பாண்டிக்கோவை, தஞ்சைவாணன் கோவை, குலோத் துங்க சோழன் கோவைகளில் மக்கள் பாட்டுத் தலைமை வகிக்கின்றனர். பாண்டிக்கோவை பல்லவ பாண்டிய

வரலாற்றுக் கருவூலமாக விளங்குகின்றது. திருக்கோவை. திருவாரூர்க்கோவை, திருவெங்கைக் கோவை முதலியன கடவுளர்களைப் பாட்டுடைத் தலைவர்களாக்கி உலகம் தழுவா வாயின. நந்திக்கலம்பகம், மூவருலா இவை வரலாற்றிலக்கியங்கள். மதுரைக் கலம்பகம், அழகர் கலம்பகம், திருவாரூர் உலா, திருப்பூவண நாதருலா எல்லாம் தெய்வத் தலைமை பெற்ற இலக்கியங்கள், நீலந்தீண்டா இலக்கியப் பறவைகள். கிளவித் தலைவர்கள் பெயர்சுட்டப்படார். பாட்டுடைத் தலைவர்களையும் அன்ன நிலையினராக்கிவிட்டால், அவ்விலக்கியங்கட்கு இவ்வுலக வாழ்வுண்டா? பொருளில்லார்க்கு இவ்வுலகம் இல்லை என்றால், மக்கட் பொருளில்லா இலக்கியங்கட்கு இவ்வுலக வேர் உண்டா? எடுத்துக் காட்டியவற்றிலிருந்து, இடைக்கால இலக்கிய வகைகள் பிழைபட்டனவல்ல எனவும், இவ்வுலகியலுக்கு உரிய இடங்களிலும் அவ்வுலகம் புகுந்து கொண்டதனால், இலக்கியப்பாழ் ஏற்பட்டதெனவும் தெரியலாம். பொடிமட்டையிலும் பொன்துகள் வைப்பாருண்டோ? இடைக்கால நல்ல இலக்கிய அமைப்பைச் சமய வல்லவர்கள் முழுதும் பற்றி அவமாக்கிவிட்டனர். மீண்டும் மக்கள் மேலாக இவற்றைப் பாடி உயிர்ப்பித்தல் தமிழிலக்கிய வளர்ச்சிக்கும் பாவளர்ச்சிக்கும் நல்லது. இற்றைப் புலவர்கள் பெரியார் பிள்ளைத் தமிழ், காந்தி பிள்ளைத் தமிழ், திருவள்ளுவர் பிள்ளைத்தமிழ் என்று உயிர்ப்பித்திருக்கக் காண்கின்றோம். மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை நீதிபதி வேதநாயகனாரைப் பாட்டுடைத் தலைவராக வைத்து,

"பொருந்த உலகர் வழக்கோர்ந்து
பொய்யிது மெய்யிதென்று
திருந்த எழுதும் திறல்வேத
நாயகச் செம்மல்"

" நாட்டுக்கு நல்லன் பதினுயிரம்
பொன் நவிலுமொரு
பாட்டுக்கு நல்கும்புகழ்வதே
நாயகப் பண்பன் "

என்று குளத்துரர்க் கோவை பாடி, கோவையை மக்கட் கோவையாக்கினர்.

## தமிழுணர்வு:

இடைக்கால இலக்கிய உலகியலோடு தொடர்புபட்டால், எதிர்காலத் தமிழுக்கு ஏற்ற வழிகாட்டி. தூது என்ற இலக்கியவகையால் எவ்வளவோ கருத்துக்களை இனிமையாகப் பரப்பலாம்.

" பஞ்சிபடா நூலே பலர்நெருடாப் பாவேகீண்டு
எஞ்சியழுக் கேரு இயற்கலேயே — விஞ்சுநிறம்
தோயாத செந்தமிழே சொல்லே ருழவரகம்
தீயாது சொல்வினையும் செய்யுளே"

" தித்திக்குந் தெள்ளமுதாய்த் தெள்ளமுதின் மேலான
முத்திக் கனியேயென் முத்தமிழே—புத்திக்குள்
உண்ணப் படுந்தேனே உன்னே டுவந்துரைக்கும்
விண்ணப்ப முண்டு விளம்பக்கேள்"

என்ற தமிழ்விடுதூது இன்றும் நாளையும் வரும் தமிழினத்தார்க்கு விடுக்குந் தூதல்லவா? என்ன சொல்வளம்! என்ன சொல்மாயம்! சங்ககால மக்கட்குத் தமிழ்மொழி இயல்பானது. ஆதலின் அதன் அருமையை அறியும் வாய்ப்பில்லே. இடைக்கால மக்கட்குத் தமிழ் அருந்தமிழ், தீந்தமிழ், ஒண்டமிழ், வண்டமிழ், ஏன்? நிழற்பெருமை வெயிலில் நின்றறிமின் என்ருங்கு பிறமொழித்தாக்கம் தமிழருமையை உனர்த்திற்று. 'இனிமையும், நீர்மையும் தமிழெனலாகும்' எனவும் 'தமிழ் தழீஇய சாயலவர்' எனவும், 'என்றுமுள தென்றமிழ் இயம்பி' எனவும், 'பார் படுப முத்தம் பதிபடுவ முத்தமிழ்' எனவும் யாண்டும்

தமிழுணர்ச்சியை ஊட்டிக்கொண்டே இருந்தனர். அவ்வூட்டத்தாலன்றோ எவ்வளவு அரசு, நாகரிகம், மொழி சாதிப் பூசல்களுக்கிடையேயும், தமிழ் நமக்குக் கிடைத்து, நாமெல்லாம் இன்றும் தமிழர்களாக இருக்கின்றோம். மக்கட் சமுதாயம் குறைபாடுடையதாக இருக்கும்வரை இலக்கியப் படைப்புக்களும் குறைசார்ந்தனவாக இருக்கும்; என்றாலும் இலக்கியத்தின் நோக்கம் முழுதும் மக்கள் வழி இயங்குவதன்று; மக்கள் வழியொடு சென்று தன் வழியில் இழுப்பது; நிறைவான நிலையைக் காட்டிக் கொண்டிருப்பது.

**ஒலித்தூய்மை:**

இடைக்கால இலக்கியத்தமிழ், எதிர்காலத் தமிழுக்கு வழிகாட்டி. நல் வழிகாட்டி என்றேன். என்றதற்கு ஒரு பெருங்காரணம், தமிழ் மொழிக்காப்பு மட்டுமன்று, தமிழொலிக் காப்பு. இலக்கியத்துறையிலும் ஏராளமாகச் சமயத்துறையிலும் பிறமொழிச் சொற்கள் கலந்தபோதும், பிறவொலிக் கலப்புக்கு இடந்தரவில்லை. ஏன்? மொழியின் உயிர்நாடி சொல்லில்லை, ஒலிதான் என்பதனைத் திடமாக அறிந்திருந்தனர். பிறமொழி கலந்த தொடக்க காலமாதலின், தொல்காப்பியர் அதுபற்றி இரு நூற்பாக்களே யாத்தனர். இடைக்காலத்துப் பிறமொழிக்கலப்பு மிகுந்தபோது பவணந்தியார் பிறவொலியாக்கம் பற்றியும் ஒலித்தொடர் பற்றியும் வரம்பான நூற்பாக்கள் பல எழுதினர். தொல்காப்பியர் சொல்லதிகாரத்திற் கூறியது போலன்றிப் பவணந்தியார் எழுத்ததிகாரத்தில் இவைபற்றிய நூற்பாக்களை எழுதிச் சேர்த்தார் என்றால், எல்லாப் பிறவொலிகளையும் தமிழ்மையாக்குவதில் அவருக்கு இருந்த விழிப்புப் பெறப்படும். பன்மொழிச் சிலேடைக்கும் யமகம் திரிபு மடக்குக்கும் பிறமொழிக் கிளவிகளைக் கூடை கூடையாக அள்ளிக்கொண்ட போதும் ஒலிக்கற்பில் பிறழவில்லை நல்லிடைக் காலத்தார். இந்நிலையை நாம் உணர வேண்டும். யாகாவாராயினும் நாகாக்க என்பதுபோல,

யாகலந்தாலும் ஒலி கலவாது தமிழ் காக்க. ஒலிக்கலப்பு என்பது தமிழ்க் கலைப்பாகும். ஒலிப்பிறழ்ச்சி என்பது தமிழ் உயிர்ப்பிறழ்ச்சி ஆகும். ஆயிரம் ஆயிரம் செய்யுட்கள் கொண்ட தமிழ்க் காப்பியங்களையும் நடுவிலக்கியங்களையும் சிற்றிலக்கியங்களையும் தெய்வப் பாடல்களையும் சமய நூல்களையும் அடிக்கடி நினைத்துக்கொள்வோமானால், ஒலித்தூய்மை பற்றிய நெஞ்சுரம் நமக்கு ஏற்படும். இவ்வோர் உண்மையையாவது இடைக்கால இலக்கியத்திலிருந்து நாம் கற்றுக் கொள்வோமாக.

# 10. தன்நெஞ்சம்

கெடுவல்யான் என்பது அறிக; தன்னெஞ்சம்
நடுவொரீஇ அல்ல செயின் (119)

என்பது அறத்துப்பால் நடுவுநிலைமை அதிகாரத்தில் வரும் குறளாகும். நேர்மை வேண்டும் என்பதுதான் இக்குறளின் அறக்கருத்தாயினும், அக்கருத்தைச் சொல்லும் முறையில் நான்கு கூறுகள் அமைந்துள்ளன. நேர்மைதவறிக் காரியம் செய்தலாகாது; அங்ஙனம் செய்யும்படி நெஞ்சை விடக்கூடாது; நெஞ்சு என்ற ஓர் உறுப்பு நேர்மைப்பிழை செய்தால் நெஞ்சுடையான் முழுதும் கெட்டுப்போவான்; இந்த அச்ச அறிவு எப்போதும் இருக்க வேண்டும்.

'கெடுவல்யான்' என்று குறளைத் தொடங்குவதி லிருந்தே வள்ளுவர் எச்சரிக்கை செய்கின்றார் என்பதனை உணர்கின்றோம். ஏன்? நேர்மை என்ற நடுவு நிலைமை ஒவ்வொருவனுக்கும் இன்றியமையாத ஒழுக்கம். மக்கட் சமுதாயம் நம்பிக்கை என்ற நாணல் கட்டப்பட்டிருக் கின்றது. ஒவ்வொரு காரியத்துக்கும் கையெழுத்துக்களும் ஆட்சான்றுகளும் ஒப்பந்தங்களும் வைத்துக்கொண்டு உலகத்தை இயக்க முடியுமா? நம்பித்தான் பலவற்றைக் கொடுக்கின்றோம், கொள்கின்றோம். நாணயக்கேடி சமு தாயப் பேடியாவான். சிறு துறையாயினும் பெருந்துறை யாயினும், சமுதாயத் தண்ணீர் நேர்மைதவறிகளுக்கு வெந்நீராக மாறிவிடும். சினங்கொண்டவனோ பொறாமை கொண்டவனோ பொய் சொன்னவனோ புறங்கூறினவனோ முழுதும் கேடடைவதில்லை. ஏன்? இக்குற்றத்தார்களைச் சமுதாயம் அடியோடு வெறுக்கக்காணோம். இவர்களைச் சிலர் அணைத்துக்கொள்ளவும் செய்ப. நாணயம் இல்லாத வனை வீடும் வெளியும் முழுச்சமுதாயமுமே விரைவில்

வெறுத்துவிடும். நேர்மை காவாவிட்டால் உன்வாழ்வு என்னுகும், தெரியுமா? வாழ்வில் ஒரு பகுதி மாத்திரம் கெடாது, முழுவாழ்வும் கெட்டுப்போம் என்பதைச் சுட்டிக் காட்டவே 'கெடுவல் யான் என்பதறிக' என்று யான் என்னும், தன்மை முழுப்பெயரை ஆட்சி செய்துள்ளார். பணத்தாள் ஏனைப் பகுதியெல்லாம் கிழிந்திருந்தாலும் எண்ணுப்பகுதி இருந்தால் செல்லுபடியாகும். எண்கெட்டு ஏனைப்பகுதி இருந்து என்ன பயன்? ஏனைய குணங்கள் கெட்டால் சமுதாய உறவு அற்றுவிடாது. நடுவு என்னும் நாணயம் கெட்டுவிட்டாலோ சமுதாயம் தள்ளுபடி செய்து விடும். நான் நாணயம் பிறழ்ந்தால் சமுதாயம் ஒன்றும் கெட்டுவிடாது; நாணயத்தைக் கெடுத்துக்கொண்ட நான் தான் கெடுவேன் என்று தெரிந்துகொள்க என்பார், 'கெடுவல் யான் என்பது அறிக' என்று உணர்த்துகின்ருர்.

'தன்நெஞ்சம் நடுவொரீஇ அல்ல செயின்' என்ற குறட்பகுதியில், நெஞ்சம் என்ற சொல்லாட்சி சிந்தனைக் குரியது. நடுவுநிலைமை கடந்தால் வாழ்வுகெடும் என்று சொன்னுற் போதாதா! நெஞ்சம் நடுவுநிலைமை கடந்தால் என்று நெஞ்சத்தின்மேல் அக் குற்றத்தை ஏற்றுவதன் கருத்து யாது? மனிதன் செய்யுங் குற்றங்களை இருவகையில் அடக்கலாம். ஒருவகை அறியாமைக்குற்றம். கல்வி வளர அறிவுபெருக அறியாமை குறையும். 'கற்றனைத்து ஊறும் அறிவு' என்பாராதலின், அறியாமைக்குற்றம் உண்மையில் குற்றம் இல்லை எனவும், கல்வியால் நிறைவு செய்யக்கூடிய ஒரு குறையே எனவும் தெளியலாம். மனிதனுக்கு உண்மையான குற்றம் என்பது மனக்குற்றமே. இக்குற்றத்தை மாசு என்பர் வள்ளுவர். 'மனத்துக்கண் மாசிலனுதல் அனைத்தறன்' என்று அறத்திற்கு இலக்கணம் வகுப்பதால், அறிவுப் பிழை அறப்பிழையாகாது; நெஞ்சப் பிழைதான் அறத்தொடுபட்ட பிழை என்று தெரிந்து கொள்ளுகின்ருேம். நேர்மைப் பிழை நெஞ்சுக்குத் தெரியாமல் நடவாது. தெரியாது கையூட்டு வாங்கி விட்டேன் எனவோ, அறியாது அளவையும் தரத்தையும்

குறைத்துக் கொடுத்துவிட்டேன் எனவோ சொல்வதை யாரும் உடன்படார். நாணயப்பிழை அறிவைச் சார்ந்த தன்று, மனத்தைச் சார்ந்தது என்பதைக் காட்டவே 'நெஞ்சம் நடுவொரீஇ' என்று நெஞ்சொடு தொடர்பு படுத்திக் கூறினர்.

நெஞ்சம் என்று தனியாகச் சொல்லாமல் 'தன்நெஞ்சம்' என்று தன்னெடு சேர்த்துச் சொல்லிய அடைதான் இக் குறளுக்கு உயிரோட்டம் ஆவது. அறிவு யார்க்கும் நிரம்புவ தன்று. 'அறிதோறு அறியாமை கண்டற்றால்' என்று வள்ளுவரும் அறிவு உறிஞ்சு தரைபோல் நிறைவுகாண முடியாக் குறைவுடையதாகவே இருக்கும் என்று சுட்டிக் காட்டுவர். பல்வேறு அறிவாளர் கூட்டாகச் சேர்ந்து கருத்துப் பரிமாறிக் காரியஞ் செய்யலாம் அறிவு கடல் போல நிறைவுபடாதது, கூட்டுறவுக்கு உரியது. ஒன்றைத் தெரியாமற் செய்தால் இன்னவனைக் கேட்டுச்செய்தேன் என்று அறிவுத்துறையில் பிறர்மேல் பாரத்தைப் போட லாம். சமுதாயமும் உடன் படும். ஒருவன் அறிவுக் குற்றம் பிறரையும் சார்ந்தது. மனக்குற்றம் ஒவ்வொரு வன் தன்னையே சார்ந்தது. என்னைக் களவாடச் சொன் னன், பொய் சொல்லச் சொன்னன், நாணயங்கெடச் சொன்னன் என்று பிறர்மேல் பழிபோடலை வள்ளுவர் உடன்படவில்லை. சமுதாயமும் உடன்படாது. யார் சொன்னலும் தன்னெஞ்சு கேட்டுக் குற்றஞ்செய்தால் தானே? குற்றஞ் செய்யத் தன்நெஞ்சு மறுத்துவிட்டால் யார் சொல்லி என்பயன்? நேர்மை என்பது பொதுப் பொருளன்று. பலர் நேர்மை தவறியிருக்கின்றார்கள் என்பது ஒப்புமை யாராய்ச்சிக்கும் மேற்கோளுக்கும் உரியதன்று. நேர்மையும் ஒழுக்கமும் அவனவன் நெஞ்சத்தின் பால. 'தன்நெஞ்சறியப் பொய்யற்க' என வாய்மை அதிகாரத் தும், 'தன்நெஞ்சம் தானறி குற்றப்படின்' எனக் கூடா வொழுக்க அதிகாரத்தும், 'கள்ளாமை காக்க தன்நெஞ்சு' எனக் கள்ளாமை யதிகாரத்தும் இவ்வாறே ஒழுக்கக் கூறுகளைத் 'தன்நெஞ்சு' என்ற வாய்பாட்டில் வைத்து

முடிப்பர் வள்ளுவர். இதனுல் தன் நேர்மைக்குத் தன் நெஞ்சு ஒன்றே மூலம், பிறிது எதுவுமன்று என்ற வரம்பு தெளிவாகின்றது.

வண்டி தடம் பிறழ்வது அறிந்தால் உரிய தடத்துக் குக் கொண்டுவர முயல்கின்ருேம். அடக்கியைப் பயன் படுத்தி ஒடுகின்ற காலே ஒடுக்குவோம்.

சென்ற இடத்தாற் செலவிடா தீதொரீஇ
நன்றின்பால் உய்ப்பது அறிவு (422)

மனம் என்னும் வண்டி நடுவுநிலேமை என்னும் நேர் பாதையிலிருந்து விலகுமானுல், அதனேத் தடுத்து ஒழுங்கு பெற ஓட்டுதல் அறிவு என்ற வலவனின் தொழில் என்று உலகியல் நிலேயில் புலப்படுத்துவர் வள்ளுவர்.

கெடுவல்யான் என்பது அறிக; தன்னெஞ்சம்
நடுவொரீஇ அல்ல செயின் (116)

என்நெஞ்சு நேர்மை பிசகினுல் நான் முதலொடுங்கெட் டொழிவனே என்று அறிந்தால், இவ்வறிவு பெற்ற அறி வாளன் தன்மனம் போன போக்கெல்லாம் போகமாட்டான்; ஊசிவழி நூல்செல்வது போலவும்,இருப்புப்பாதை வழி புகை யூர்தி இயங்குவது போலவும், அறிவுவழி தன் மனத்தைக் கட்டிக்காப்பான். தன் உணர்ச்சிகளே விம்மவும் குமுறவும் கொந்தளிக்கவும் விடாது அறிவுக் கரை வழி ஒழுங்கு படுத்துவான்.

நெஞ்சுடையார் எல்லாம் உடையாரல்லர்; நெஞ்சை ஒழுங்கு படுத்தும் அறிவுடையாரே எல்லாம் உடையார்.

# 11. இலக்கியத் தளம்

இலக்கியம் ஒரு மொழிக்கலை, மிகப்பழங்கலை, பல கலை கட்கும் அடிக்கலை. இக்கலையை ஓரளவு துய்ப்பதற்குத் தனிப் பெரும் பயிற்சி வேண்டுவதில்லை. வேண்டுவது இலக்கிய ஆர்வமே. எழுத்தறியாக் குழந்தை முதலாக யாரும் கவிதையைக் கேட்டுச் சுவைக்கலாம். பருவத்துக்கு ஏற்ற இலக்கிய வகைகள் உள, பாட்டுக்கள் உள.

ஒன்றைச் சுவைக்கும் திறம் வேறு; ஆக்கும் திறம் வேறு. நாவாரச் சுவைத்து உண்பவர்க்குச் சமையல் அறிவோ, வனப்பாக உடுத்துபவர்க்கு நெசவறிவோ, அணிபல் பூணு வார்க்குக் கொல்லறிவோ, பயணஞ் செய்வார்க்கு ஊர்தி களின் அறிவோ தேவையா? உண்டா? மக்கள் நுகரும் பொருள்கள் எண்ணிறந்தன. ஆனல் அவற்றைப் பற்றிய தன்மையறிவு பெரும்பாலார்க்கு இராது, வேண்டுவதும் இல்லை. அறிந்துதான் ஒன்றை நுகர்வது என்ருல் கடைபோகாது. நுகரும் சுவை நிலைவேறு. நுகர்பொருளை அறிநிலை வேறு. ஆனல் யாருக்காவது ஒன்றைப் படைக்கும் திறம் இல்லாவிட்டால், துய்க்கும் வாய்ப்பினை எல்லாரும் இழப்பர்.

வள்ளுவர் திருக்குறளை, இளங்கோவின் சிலப்பதி காரத்தை, பாரதியார் பாடல்களை நுகர்வோர் வழிவழிக் கோடியர். இலக்கியம் படைப்போன் ஒருவனே. பயன் பெறுநர் தொகைக்குக் கால இடவரம்பில்லை. இன்று மக்கட் பெருக்கத்திற்கு ஏற்ப இலக்கியச்சுவைஞர் தொகையும் கூடுத லாகி வருகின்றது. ஆனல் நல்லிலக்கியம் படைக்குநர் தொகை வேண்டுமளவு கூடவில்லை. படைப்பாற்றலும் நயமாக இல்லை. துய்ப்பதில் பரப்புவதில் உள்ள நாட்டம் படைப்பதில் இல்லையே.

இலக்கியம் செய்வது எங்ஙனம்? இலக்கியன் தன் உலகப் பார்வை எது? பார்வைப் பொருளில் இலக்கியச் சாயம் ஏற்றுவது எவ்வாறு? இலக்கிய நூல் நெசவில் சொல்லிழை எத்தன்மைத்து? இலக்கிய ஞாலத்தில் மன்னும் பகுதி எது? மன்னுப் பகுதி எது? இலக்கியப் படைப்புக்கு இன்ன அறிவோட்டங்கள் வேண்டும்? இன்ன அறிவு கைவரப்பெறுபவன் புதிய வீற்றிலக்கியங்களைத் தோற்று விக்கமுடியும்?

## இருபாங்கு:

எக்காலத்து இலக்கியம் ஆயினும், எந்நாட்டு இலக்கியம் ஆயினும், இலக்கியம் கூறும் பொதுப்படையான பாங்குகளை எண்ணிவிடலாம். காதலும் வீரமும், இல்லறமும் துறவறமும், நாடும் போரும், நேர்மையும் வஞ்சகமும், நட்பும் பகையும், உரிமையும் அடிமையும், எள்ளலும் துள்ளலும், எதிர்பார்ப்பும் ஏமாற்றமும், அறியாமையும் இரக்கமும், தாய்மையும் வாய்மையும், பேய்மையும் நாய்மையும் என்றிவை இலக்கியப் பாடுபொருளாக வருகின்றன. இம் மனிதப் பான்மைகள் பொதுவாயினும் இப்பான்மைகளைப் புலப்படுத்தவரும் மெய்ந் நிகழ்ச்சிகள் பொதுவானவையல்ல. இனம் காலம் இடம் என்ற சமுதாய வரம்புடையவை. என்ன உணர்ச்சியைக் காட்ட நினைப்பினும், அதனை ஓர் இடத்தொடும் காலத்தொடும் ஆளொடும் சேர்த்துத் தானே கூறவேண்டும்? வானத்துப் பிறப்பினும் பறவைக்கு நிலத்தில் ஒரு கூடு உண்டு. ஞாலமுழுதும் வேகத்தியங்கும் வானூர் திக்குத் தங்குதரை உண்டு. அகலவிரியினும் ஆலமரத்துக்கு ஓர் அடி உண்டு எண்ணங்கள் விரிந்தோடினும் நெஞ்செனை ஒரு பகுதி உண்டு. யார் யாது பாடினும் இலக்கியத்துக்கு ஒரு சமுதாயத்தளம் உண்டு. ஒரு சமுதாயத்தோடும் ஒட்டாது, ஒட்டக்கூடாது என்று இலக்கியம் பாடுவானாயின், அவன் படைப்பு விளங்காது, வேர்கொள்ளாது. வானத்து வரைந்த வடிவுபோல இனப்பற்றுக்கோடின்றி அழியும். பல்வேறு நாட்டிலக்கியங்கள் எனவும், ஒரு நாட்டினுள்ளும்

பல்வேறு கால இலக்கியங்கள் எனவும் பாகுபாடு செய்வதற்குச் சமுதாயத்தள வேற்றுமையே காரணமாம். பாடும் புலவன் தன் கருத்தினை எவ்வளவு சமுதாயத்துக்கு இயைபாகப் பாடுகின்றான், அவ்வளவுக்கு அவன் படைப்பு உலகவுயிர்ப்பு உடையதாக இருக்கும், நெடிது வாழும். சமுதாயத்தளம் காலந்தோறும் மாற்றம் பெறினும், மன்னுதாயினும், அம் மாற்றத்தில் அம் மன்னுமையில், நிலை பேற்றுத் தன்மை பிறக்கின்றது. சமுதாய மாற்றம் விதையழிவு போன்றது. அவ்வழிவு ஆக்கத்துக்கு உரம் தருகின்றது. இத்தளம் இல்லா இலக்கியம் வாணம் இல்லாக் கட்டிடம் ஒக்கும்.

குறுந்தொகை:

அகவல் மகளே அகவல் மகளே !
மனவுக் கோப்பன்ன நன்னெடுங் கூந்தல்
அகவல் மகளே அகவல் மகளே !
இன்னும் பாடுக பாட்டே அவர்
நன்னெடுங் குன்றம் பாடிய பாட்டே

(குறுந். 23)

இக்குறுந்தொகைப் பாட்டு தோழி அறத்தொடு நிற்கும் துறையில் அமைந்தது. தலைவியின் மெலிவுக்குக் காரணம் யாது என்று குறிசொல்லும் குறத்தியை அன்னை கேட்கின்றாள். குறி சொல்லுங்கால், முருகன் வீற்றிருக்கும் மலைகளை எண்ணுவது ஒரு மரபு. அங்ஙனம் ஒரு மலையைப் பாடி வருகையில், அதனையே மேலும் மேலும் பாடுக பாடுக என்று தோழி வேண்டுகின்றாள். இதன் குறிப்பு என்ன? அம்மலையில் வாழ்கின்ற ஓர் ஆடவனே இவளுக்கு நோய்தந்த காதலன் என்பது தோழியின் சுட்டு. குறமகளின் தோற்றமும் அவள் சங்கு மணி அணிவதும் தாய் குறிகேட்பதும் குறி நம்பிக்கையும் தெய்வத்தால் ஆயது என வெறியாடுவதும் எல்லாம் தமிழ்ச் சமுதாயத்தின் பழக்க வழக்கங்கள். காதலும்

கற்புத் துணிவும் மக்கட் பொதுவாயினும், அக்கற்புக் காதலைத் தமிழ்ச் சமுதாயத்தில் வைத்து அகத்திணை இலக்கியம் காட்டுகின்றது.

**திருக்குறள்:**

திருக்குறள் கூறும் அறங்கள் இடம் காலம் இனம் கடந்தனவாயினும், இலக்கிய விளக்கத்தில் இடம் காலம் இனத்தொடு பட்டவை. தமிழ்ச் சமுதாயச் சாயல் கொண்டவை. தமிழரின் பழக்க வழக்கங்களின்மேல் எழுந்தவை.

என்னைமுன் நில்லன்மின் தெவ்விர்! பலரென்னை
முன்னின்று கன்னின் றவர் (771)

இக்குறள் போர்க்களத்து மறவன் கூற்று. தன் தலைவனை எதிர்த்துவந்த பகைவர்களை விளித்து, 'இதற்கு முன்னும் என் தலைவனொடு போரிட வந்தோர் எண்ணிலர். அவரெல்லாம் என்னுயினர்? வெல்லமாட்டாது அவன் அம்பு பட்டு நடுகல் ஆயினர். நீவிர் உயிர் விரும்புகின்றீரா? உயிர் கொடுத்து வீரக்கல் விரும்புகின்றீரா?' என்று நெடுமொழி புகல்கின்றான் படைவீரன். பொருகளத்தில் விழுப்புண்பட்டு மடிந்த வீரர்க்கு வீரக்கல் நடுவது தமிழ் மரபு. நாட்டுப்பற்றுக்கு உரிய பொது வீரவுணர்வைத் தமிழ் நாகரிக வாயிலாக விளக்குகின்றார் வள்ளுவர். அருவப் பொருளான உணர்ச்சிகளுக்கு உருவப் பொருளான சமுதாய நிலை வேண்டும்.

**சிலப்பதிகாரம்:**

கண்ணகி கருங்கணும் மாதவி செங்கணும்
உண்ணிறை கரந்தகத்து ஒளித்துநீர் உகுத்தன;
எண்ணுமுறை இடத்தினும் வலத்தினும் துடித்தன;
விண்ணவர் கோமான் விழவுநாள் அகத்து

(சிலப். 5)

இச்சிலப்பதிகாரப் பகுதியில் இந்திரவிழாக் காலத்துக் கண்ணகியின் அவல நிலையையும் மாதவியின் இன்ப நிலை

யையும் புலப்படுத்துகின்றூர் இளங்கோ. புலப்படுத்தும் இலக்கியப்புனேவில் ஒரு தமிழ் மரபு பொதிந்து கிடக்கின் றது. இவ்விழாவுக்குப் பின்னர் கோவலன் கண்ணகியை அணேகின்ருன், மாதவியை அகல்கின்ருன். கண்ணகிக்கு இன்பநிலேயும் மாதவிக்கு அவலநிலேயும் இனி வரப் போகின்றன. இந்த எதிர்கால மாற்றத்தைக் குறிப்பிற் புலப்படுத்துவதற்கு ஒரு தமிழினப் பழக்கவழக்கத்தை இலக்கியப் படுத்துகின்றூர் இளங்கோப் புலவர். மகளிர்க்கு இடக்கண் துடிப்பது நன்மைக்கு அறிகுறி என்பதும் வலக் கண் துடிப்பது தீமைக்கு அறிகுறி என்பதும் தமிழர் நம்பிக்கை. இந்திரவிழாவில் கண்ணகிகண் இடமும் மாதவிகண் வலமும் துடித்தன என்று பாடிய அளவில் இருவரின் எதிர்கால வாழ்வைத் தமிழர் புரிந்துகொள்வர்.

**இராமாயணம் :**

கம்பர் தம் தழுவுகாப்பியத்தில் தமிழ்ச் சமுதாயத் தளத்தைக் கலந்து பாடியுள்ளார் என்பது அவருக்கு உள்ள தனிப்பெருமை. சுக்கிரீவன் குறித்த காலத்து உதவிக்கு வரவில்லே என்று சினக்கின்ருன் இலக்குவன். சினத்தோடு கிட்கிந்தை செல்கின்ருன். அவன் சீற்றத் துக்கு முன்னிற்பார் யார் என்று அஞ்சுகின்ற அனுமன், ஒரு சூழ்ச்சியாக வாலியின் மனேவி தாரையை இலக்குவனே வரவேற்க விடுக்கின்ருன். தாரையோ அணிமையில் கணவனே இழந்த கைம்மையள். அவள் தாலியற்ற, நகை யற்ற, திலகமற்ற வெள்ளுடைக் கோலத்தி.

மங்கல அணியை நீக்கி
மணியணி துறந்து வாசக்
கொங்கலர் கோதை மாற்றிக்
குங்குமச் சாந்தங் கொட்டாப்
பொங்குவெம் முலேகள் பூகக்
கழுத்தொடு மறையப் போர்த்த
நங்கையைக் கண்ட வள்ளல்
நயனங்கள் பனிப்ப நின்ருன்

(கிட்கி. கிட்.)

இக்கைம்மைக் கோலத்தைக் கண்ணுற்றதும் இலக்குவனுக்குச் சினவுணர்ச்சி மறைந்தது. தன் தந்தையாம் கணவனே இழந்த கோசலே சுமித்திரை முதலியோரும் அழகு களேந்து இவ்வவலத் தோற்றத்திற்ருனே காலங் கழிப்பர் என்ற ஊர் நினைவு பளிச்சென அவன் நெஞ்சில் தைத்தது. உணர்ச்சிகளின் மாற்றத்திற்குத் தமிழ்ச் சமுதாயத்தளத்தை எங்ஙனம் நுட்பமாகப் பயன் கொள்ளுகின்ருர் கம்பர் என்பதற்கு இஃது ஓர் எடுத்துக்காட்டு.

சங்கநூல்களும், சிலப்பதிகாரம் பெரியபுராணம் கம்பராமாயணம் போன்ற இலக்கியப் பெருநூல்களும் காலங் கடந்து வாழ்வதற்குக் காரணம், புலவன் காலத்தோடு ஒட்டிப்படைத்தது, தன்காலச் சமுதாயத்தோடு பின்னிப் பிணேத்து எழுதியது. சமுதாய தளத்தோடு ஒட்டாத இலக்கியம் தண்டிற் கட்டாத கொடியாகிவிடும். இலக்கியச்சிந்தனே எவ்வாறு ஓடினும் அவ்வோட்டத்தை வழிப் படுத்தி நிலேப்படுத்துவது வரம்பும் மரபும் வரலாறும் உடைய சமுதாயத்தளமே.

## 12. குறள் விளக்கம்?

திருக்குறள் தன்விளக்கம் வாய்ந்த எளிய இனிய நூல்; தனக்கு வேறொரு விளக்கம் வேண்டாத் தெளிவு நூல்; உவமைகள் மலிந்த நூல்; கருத்துக்களைப் பலநிலையில் புலப்படுத்தும் நூல். அந்தத் திருக்குறளுக்கு எவ்வளவு உரைகள், உரைக்கு உரைகள், சிறப்புரைகள், விரிவுரைகள், தெளிவுரைகள், நயவுரைகள் எனவாங்கு எவ்வளவோ வகையுரைகள், எவ்வளவு விளக்கங்கள்! விளக்கத்தின் மேலும் விளக்கங்கள் எவ்வளவு? திறன்களும் திறத்திறன்களும், கட்டுரைகளும் பொழிவுகளும், கதை விளக்கங்களும் எவ்வளவு?

இவ்வளவு இருந்தும், திருக்குறளில் என்ன விளங்கிக் கொண்டோம் என்று கேட்கத் தோன்றுகின்றது. அறம் பொருள் இன்பம் வீடு எல்லாம் தெளிந்தோம் என்று திருவள்ளுவமாலை புகன்றாலும், என்ன தெளிந்தோம் என்று மறுக்கத் தோன்றுகின்றது? சுருங்கிய சொல்லால் பொருள் விளங்கக் கூறுவதில் வல்லவர் வள்ளுவர் என்று திருவள்ளுவமாலை உரைத்தாலும், அவர் வல்லவர்தான்; நாம் பொருள் விளங்கிக்கொண்ட வல்லவர்களா என்ற ஐயம் ஏற்படுகிறது.

குறள் விளக்கம் என்றால் என்ன? உரையா? நயமா? உரைப் பன்மையா? ஆராய்ச்சி நுண்மையா?

எண்ணிய எண்ணியாங்கு எய்துப எண்ணியார்
திண்ணிய ராகப் பெறின் (666)

இந்தக் குறளுக்குக் குறளின் மேலும் என்ன தெளிவு வேண்டிக்கிடக்கின்றது. பல குறள்களுக்குப் பலவுரைகள் எழுதப்பட்டுள்ளன. புதிய விளக்கங்கள் எழுந்துள்ளன.

புத்துரையும் புது விளக்கமும் மேலும் மேலும் வந்து கொண்டிருக்கின்றன. இவ்வகை வரவு ஒருநாளும் ஓயாது. ஓரளவு தமிழ் பயின்றார்க்கும் ஆயிரங் குறள்கள் தாமே விளங்கி நிற்கும். இதுவா விளக்கம்? இதுவா குறளின் தலை நோக்கம்?

**ஓவியநிலை :**

ஓவியத்தில் ஒரு மாம்பழத்தைக் காண்கின்றோம். மெய்யான ஒரு மாம்பழத்தைத் தின்னுகின்றோம். இவ்விரு நிலைமைக்கும் எவ்வளவு வேறுபாடு? மலையோவியப் பயன் வேறு; மலைப்பயன் வேறு. கட்டிடப் படத்தின் தன்மை வேறு; கட்டிடத்தின் தன்மை வேறு. இவ்வோவியங்கள் மிகத் தெளிவானவை என்றே கொள்வோம். ஓவியப் பயன் முற்றும் வேறு. பொருட்பயன் முற்றும் வேறன்றோ? மலையோவியம் மலைபோல் கனக்காது. கட்டிட வரைவின் மதிப்பு என்ன? கட்டிடத்தின் மதிப்பு என்ன? பழ ஓவியத்துக்குச் சுவை உண்டா? ஆதலின் ஓவியம் உருவச் சாயலே தவிர உண்மை நிலையில்லை.

திருக்குறள் அறங்களும் இத்தகையவே. குறள்கள் நல்ல அறவோவியங்கள், அறவுரைகள். மலையோவியத்தைக் காண்பவனுக்கு மலையையே நேரிற் காணும் உணர்ச்சி வரவேண்டும். கட்டிடப் படம் வரைவதன் நோக்கம் அதுபோல் ஒரு கட்டிடம் கட்டவன்றோ?

விளங்கியது, விளங்கியது என்று நாம் சொல்லும்போது ஒருவகை விளக்கத்தையே எண்ணிப் பேசுகின்றோம். ஒருவர் சொல்லும் கருத்தோ, ஒரு நூலின் கருத்தோ தெளிவாகப் புரிவதை விளங்கிற்று என்கின்றோம். உவமை, ஒப்புதல், மேற்கோள் எல்லாம் இப் பிரிவின் கூறுகளாகும். இதனை மொழி விளக்கம் என்று கூறலாம். மொழி விளக்கம் வேறு, வினை விளக்கம் வேறு. முன்னது ஓவியநிலை; பின்னது உண்மை நிலை. கசடறக் கற்றல் ஓவிய நிலை; கற்றபின் நிற்றலே உண்மைநிலை. ஓதியும் உணர்ந்தும்

பிறர்க்கு உரைத்தல் ஒவியநிலை; தானடங்குதலே உண்மை நிலை.

உண்மை நிலை :

திருக்குறளை ஒவியநிலையில் வைத்தே கற்றும் கற்பித்தும் பாராட்டியும் வருகின்றோம். உண்மைநிலை என ஒன்று உண்டு என்பது நமக்குப் படவில்லை. இவ்வுண்மைநிலை என்பது என்ன? மருந்துக்கடையில் பன் மருந்துகள் இருந்தாலும் தன் உடல் நிலைக்கு வேண்டிய மருந்தினையே பெறுவர். செய்துணிக் கடையில் அளவுப்பல் சட்டைகள் இருந்தாலும், தன் உடலளவுக்குத் தக்க சட்டையையே எடுத்துக்கொள்வர். வண்ணத்துணி பல இருந்தாலும் தன் மேனி நிறத்தோடு வைத்துப் பார்த்துத் துணிவண்ணம் தேர்குவர். கடைவீதியில் நிரம்பிய பல்பொருள் குவிந் திருந்தாலும், தன் கைப்பொருளுக்கு ஏற்பவே சரக்குகளை வாங்கிக் கொள்வர். இதன் அடிப்படை யாது? எதனையும் தன்னிலையில் வைத்துக் காண்பது. தன்னிலைப் பார்வை என்ற கண்ணில்லாவிடின், தனக்கும் பரந்த உலகிற்கும் என்ன தொடர்பு ஏற்படும்? வாழ்வு வளமும் வாழ்வு விரிவும் வேண்டுமேல், எதனையும் தன்னொடு பொருத்தியும் ஒட்டியும் இணைத்தும் காணும் எண்ணோட்டம்-தன்னோட்டம்-வேண்டும். இவ்வோட்டம் உடையவரே எண்ணிய எண்ணியபடி எய்துவர். பரந்து செல்லும் நீரை வேர் தன் பக்கம் உறிஞ்சிக் கொள்கின்றது. பல்வளம் உடைய மண்ணில் பயிர் தனக்குரிய மண்ணூற்றலைத் தேர்ந்து வளர்கின்றது. 'தன்' என்பது உலகத்தோடு தொடர்பு கொள்ளும் கயிறு. தன்னிலைப் பார்வை என்ற கயிறு அறுந்தவன் உலகக் குருடன் ஆகின்றான். தன்னிலைப் பார்வை வேறு, தன்னலப் பார்வை வேறு என்பது உணரத்தகும்.

தன்னிலைப் பார்வை :

திருக்குறளில் மொழி விளக்கத்தையே கண்டும் காட்டியும் வரும் நாம் இனி தன்னிலைப் பார்வையைக்

காணுமாறு முயலவேண்டும். இம் முயல்வு ஒவ்வொருவரின் தனி முயல்வாகும். தன் வாய் திறவாவிட்டால் தன் வயிறு நிரம்பாதது போலத் தனிப் பார்வை யில்லாவிட்டால், தன்வளம் இராது. இந்நிலையில் பின்வரும் குறள்களை முதலிற் காண்போம்:

தூங்குக தூங்கிச் செயற்பால; தூங்கற்க
தூங்காது செய்யும் வினை. (672)

செய்தக்க அல்ல செயக்கெடும்; செய்தக்க
செய்யாமை யானும் கெடும். (466)

எவ்வது உறைவது உலகம் உலகத்தொடு
அவ்வது உறைவது அறிவு. (426)

இதனை இதனான் இவன்முடிக்கும் என்றாய்ந்து
அதனை அவன்கண் விடல். (517)

ஒல்லும் வகையான் அறவினை யோவாதே
செல்லும்வாய் எல்லாம் செயல். (33)

உப்பமைந் தற்றால் புலவி; அதுசிறிது
மிக்கற்றால் நீள விடல் (1302)

தாமதித்துச் செய்வதைத் தாமதித்துச் செய்க; உடனே செய்யவேண்டியவற்றை உடனடியாகச் செய்க என்ற கருத்தில் என்ன விளங்கிற்று? எந்தக் காரியம் தாமதத்திற்கு உரியது? எது உடனே செய்தற்கு உரியது என வள்ளுவர் கூறியிருக்கின்றாரா? கூறத்தான் முடியுமா? எந்தக் காரியம் என்ற பகுத்தறிவு அவனவனுக்கு வேண்டும். எவை செய்யத் தக்கவை, எவை செய்யத் தகாதவை, எப்படிச் செல்லுகின்றது உலகம் என்று தெரிவது அவனவன் நிலையைப் பொறுத்தது. 'இதனை இதனான் இவன் முடிக்கும்' என்ற குறளானது, வாய்பாடு காட்டும் இலக்கண நூற்பா நடையில் அமைந்துள்ளது. 'இ' என்ற சுட்டுக்கள் காட்டும் உண்மைப் பொருள்கள் யாவை என்று வரையறுத்தல் யாராலும் முடியுமா? அவனவனே தன் நிலைக்கு ஏற்பக்

கண்டுகொள்ளும் மதி நுட்பம் வேண்டும். அறவினை, ஒல்லும் வகை, செல்லும் வாய் என்பன செய்பவன் தெளிவுக்கு விடப்பட்டவை. புலவி, உப்பளவு, உப்பின் மிக்களவு என்பவை அவரவர் அறிவளவை ஒட்டியன.

வலியறிதல், இடனறிதல், கால மறிதல், சிற்றினஞ் சேராமை, கூடா நட்பு, தீநட்பு, பொறையுடைமை, பயனில சொல்லாமை என்ற அதிகாரங்கள் எல்லாம் கற்பவன் பகுத்தறிவுக்கு விடப்பட்டவை. 'கற்பவை கற்க' 'அஞ்சுவது அஞ்சாமை பேதைமை' 'நிலையின் இழிந்தக் கடை' 'வாழ்வாங்கு வாழ்பவன்' போற்றின் அறியவை போற்றல்' 'செயற்கரிய செய்வார்' 'அளவறிந்து வாழா தான்' 'யாதனின் நீங்கியான்' 'உலகத்தோடு ஒட்ட ஒழுகல்' 'காலத்தினுல் செய்த நன்றி' 'இரத்தக்கார்க் காணின்' 'அளவறிந்து உண்க' என வரும் நூற்றுக்கணக் கான வள்ளுவத் தொடர்களின் விளக்கம் உரைகளுக்கு உட்படுமா? அவனவன் நிலைக்கு ஏற்ப வினைக்கண் வேறு படும்.

குறளறங்கள் வரையறுக்கப்பட்டுள. ஆனுல் அவ் வறத் துக்கு உரிய நிகழ்ச்சிகள் வரையறைக்கு உட்படுவனவல்ல. இன்று மிக விரைவாகச் செய்த காரியத்தை நாளை மிகத் தாமதமாகச் செய்யவேண்டி நேரிடும்; பலநாள் தாமதமாகச் செய்ய நேர்ந்தாலும் நேரும்; கைவிட வேண்டி நேர்ந்தாலும் நேரும். இவ் வினை நுட்பத்தை வரையறுக்க முடியுமா? அறத்தின் செயல் அவனவன் அறிவுத் திறத்தைப் பொறுத்தது. அதற்குச் செயற்பயிற்சி வேண்டும். ஒவ்வொரு வரும் தன்னுணர்வைத் தன்னெண்ணத்தை தன் போக்கை அடிக்கடி நினைத்துப் பார்க்க வேண்டும் எனப் பல இடங்களில் வலியுறுத்துவர் வள்ளுவர்.

இகழ்ச்சியிற் கெட்டாரை யுள்ளுக; தாந்தம்
மகிழ்ச்சியின் மைந்துறும் போழ்து. (539)

வலியார்முன் தன்னை நினைக்கத் தான்தன்னின்
மெலியார்மேற் செல்லும் இடத்து. (250)

உள்ளியது எய்தல் எளிதுமன் மற்றுந்தான்
உள்ளியது உள்ளப் பெறின். (540)

பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தத்தம்
கருமமே கட்டளைக் கல். (505)

திருக்குறளைப் பொது பொது என்று சொல்லிச் சொல்லி வாளிருந்தும் பேடியானேம், வாயிருந்தும் ஊமையானேம். ஊருணி பொது என்றாலும் எல்லா உயிர்க்கும் ஒரு பொது வாய் உண்டோ? காற்றுப் பொது; எல்லா உயிர்க்கும் ' ஒரு பொது மூக்கு உண்டா? இவ்வாறே பொது உடம்பு, பொது வுயிர் என்றெல்லாம் உண்டுகொல்? திருக்குறள் ஒவ்வொரு வர் வாழ்விலும் பயன்படவேண்டும்; தற்பார்வை வேண்டும். ஒவ்வொரு குறளும் தனக்கு எவ்வகையாற் பொருந்துங் கொல் எனவும், தனக்குப் பொருந்தும் குறள் எதுகொல் எனவும் அறிவு நாட்டம் வேண்டும். குறள் விளக்கம் என்பது தன் வினை விளக்கம். வினைவிளக்கம் என்பது தன் அறிவுப் பார்வை. வள்ளுவர் தன்நூலைக் கற்பவ னிடத்து ஒன்றையே எதிர்பார்க்கின்றார். அவ்வொன்று இருந்தால் எல்லாம் உண்டாகுமாம். அவ்வொன்று இல்லையேல் எல்லாம் இல்லையாகி விடுமாம்.

அறிவுடையார் எல்லாம் உடையார்; அறிவிலார்
என்னுடைய ரேனும் இலர். (430)

வள்ளுவர் நம்மிடம் எதிர்பார்ப்பது பகுத்தறிவு, தன்னறிவு, தன்னிலையறிவே. தன்னறிவுடையார் வாழ்வாங்கு வாழ்வர்; தன்னறிவில்லார் வீழ்வாங்கு வீழ்வர்.

## 13. நம்பிக்கை நூல்

பலருக்கு ஆராய நூல் வேண்டும், சொற்பொழிவாற்றக் கருத்து வேண்டும் என்பதற்காகத் திருவள்ளுவர் திருக்குறளை இயற்றவில்லை. எல்லோரும் வாழவேண்டும், எப்படி வாழ் விப்பது என்ற தலையாய நோக்கமே திருக்குறட் பிறப்பிற்குக் காரணம். இந்நோக்கம் எல்லாக் குறள்களிலும் வெளிப் படக் காணலாம். மிகக் கீழானுர்க்கும் உயர்வுண்டு, இயல் பாகவுள்ளவர்க்கும் மேலுயர்வு உண்டு, மிகவுயர்ந்தார்க்கும் மேன்மேலுயர்ச்சியுண்டு என்ற நம்பிக்கையைத் திருக்குறள் நமக்கு ஊட்டுகின்றது.

தாழ்ந்தாரைப் பார்த்துச் சோர்வடைய வேண்டாம் எனவும், உயர்ந்தாரைப் பார்த்து அமைதியடையவேண் டாம் எனவும், ஊக்கமும் ஆக்கமும் தருவது திருக்குறள். எல்லார்க்கும் பொதுவான அறங்களைக் கூறுவது குறள் என்று சொல்லி வருகின்றோம். இது எவ்வளவு தவறான கருத்து? எவ்வளவு வீழ்வான கருத்து? பொது அறம் கூறாது அவரவர்க்குப் பொருத்தமான அறங்கூறுவதே குறள். இதுவே குறளின் தனிச்சிறப்பு பொதுவறம் செயற்படுமா? பொதுமடம் துப்புரவுப்படுமா?

''நிதி மிகுந்தவர் பொற்குவை தாரீர், நிதி குறைந்தவர் காசுகள் தாரீர், அதுவும் அற்றவர் வாய்ச்சொல் அருளீர்'' என்று பொருள் நிலைக்கு ஏற்ற அறம் பாரதியார் கூறியிருப்பதை அறிவோம். அதுபோல் உலகுபுகழ் வள்ளுவர் ஒவ்வொருவரையும் தனித்தனியாக முன்னேற்ற வேண்டி, அவரவர் செய்வதற்கு ஏற்ற அறங் கூறியுள்ளார். அறத்திற்காக அறம் எழுதவில்லை அவர். இவ்வுண்மையை இப்போது நாம் தெளிந்து வருகின்றோம். யாரையும் முன்னேற்றிவிட வல்லது முப்பால் என்பதனை ஊரறிய

உலகறியத் தெளிவிக்க வேண்டும். 'என் நிலைக்கு ஏற்ற அறம் இந்நூலில் உண்டு; ஆதலால் எனக்கும் முன்னேற்றம் உண்டு' என்ற மெய்ந்நம்பிக்கையோடு திருக்குறளைப் படியுங்கள்.

**அறம்:**

அறம் எல்லா மக்களும் செய்ய வேண்டிய கடமை. எனினும் இப்படிச் செல்வதுதான் அறம், இவ்வளவு செய்தாற்றான் அறம் என வரம்பு கட்டலாமா? வள்ளுவர் அறம் வலியுறுத்தினரேயன்றி அதற்கு ஓர் அரண் கட்டவில்லை.

ஒல்லும் வகையான் அறவினை ஓவாதே
செல்லும் வாயெல்லாம் செயல் (33)

இக்குறளில் அவர் நெகிழ்ச்சியைப் பாருங்கள். ஒல்லும் வகையான் எனவும், செல்லும்வாய் எனவும் அறஞ்செய்வான் நோக்கத்திற்கு எவ்வளவு தாராளமாக விட்டுக்கொடுக்கின்றார்? தலைமேல் புல்லுக் கட்டை இறக்கி உதவுவதும், ஆட்டின் கால் முள்ளை அணைத்து எடுப்பதும், முதியோர்க்கு இடங்கொடுத்து இளையோர் எழுந்து நிற்பதும், இவ்வூர்க்குச் செல்வது இவ்வண்டியா என வினவினர்க்குச் சலிப்பின்றி அறிவுறுத்தலும் எல்லாமே சிறுவினையாயினும் அறவினை யல்லவா? வள்ளலிடம் சென்றான் வறியனாய்த் திரும்பான்; வள்ளுவரைக் கற்றான் வாழாதிரான். வள்ளல் எப்படியும் கொடுப்பான்; வள்ளுவர் எப்படியும் வாழ்விப்பார்.

வாழ்வின் உயர்விற்கு இன்னவளவு பொருளாதார அடிப்படை வேண்டும் எனப் பலர் மயங்கி எண்ணம் தடுமாறிச் சோர்வடைகின்றனர். உள்ள நிலையை மேலும் குள்ள நிலையாக்கிக் கொள்கின்றனர். உயர்வுக்குப் புறவடிப்படை வேண்டாம் என்பது வள்ளுவம். உயர்வாக வேண்டும் என்றால், வேண்டும் என்ற எண்ணம் வேண்டும்; அவ்வெண்ணத்தைத் திரும்பத் திரும்ப எண்ண வேண்டும்; எண்ணப் பித்து வேண்டும் இதுவே உயர்வுக்கு வள்ளுவர் காட்டும் நெறி.

உள்ளம் உடைமை உடைமை; பொருளுடைமை
நில்லாது நீங்கி விடும். (592)

எந்தப் பொருளடிப்படை வேண்டும் என நாம் நினைக்கின்றேமோ அதனை வள்ளுவப் பேராசிரியன் உடன்படவில்லை. பொருளோ தரக்கூடிய அடிப்படை என இகழ்வதைக் காணுங்கள். உலகில் பொருளுடையாரெல்லாம் உயர்ந்து விடவில்லையே. பொருளிலாரெல்லாம் தாழ்ந்து விடவில்லையே. பொருளாளர் தாழவும் பொருளிலார் உயரவும் காண்கின்றேம். ஆதலால் உயரவேண்டும் என்ற ஊக்கமே நல்வாழ்வுக்கு அடிப்படை என்பர் ஆசிரியர். இதனைவிட உயர்வுக்கு எளிய நெறி காட்ட முடியுமா? திருக்குறள் காட்டும் வழி ஏற்ற நெறி மட்டுமன்று; செய்தற்கு எளிய நெறியுமாகும்.

**பொருள்:**

திருக்குறளில் பொருட்பாலே பெரும்பால். இப்பாலில் கூறப்படும் அரசியல் நெறிகள் நடைமுறைக்கு உகந்தவை. முடியரசு, குடியரசு, படையரசு என்ற வகைக்கு உட்பட்டு வள்ளுவர் அரசியல் வகுக்கவில்லை. நாடென்றால் அதற்கோர் நல்லரசு வேண்டும், அது வல்லரசாகவும் இருத்தல் வேண்டும் என்பதுவே வள்ளுவ அரசியல்.

படைகுடி கூழமைச்சு நட்பரண் ஆறும்
உடையான் அரசருள் ஏறு. (381)

இது பொருட்பாலின் முதற்குறள். அரசியல் நெறி பேசும் முதற் குறளிலேயே படை என்ற சொல்லை முதலாவதாக வைத்துப் பாடுகின்றார் வள்ளுவர். படையற்றது அரசாகாது என்ற பேருண்மையை இதனைக் காட்டிலும் வேறு வகையான் அறிவுறுத்த முடியுமா? தமிழறிஞர்-எவ்வளவோ நூற்றாண்டுக்கு முன்னர் வலியுறுத்தியிருந்துங்கூட, சீனப் படையெடுப்புக்குப் பின்னரேதான் படையின் இன்றியமையாமையை நாம் உணர்ந்து கொண்டோம்.

அரசு வினையாளரிடம் கையூட்டை எங்ஙனம் ஒழிப்பது என்று நம் இந்தியத் தலையரசும் உறுப்பரசுகளும் என்றும்

மும்முரமாக ஆராய்ந்து கொண்டிருக்கின்றனர். பலப்பல குழுக்களைப் புதுவதாக அமைக்க எண்ணுகின்றனர். இக்குழுக்களுக்குள்ளும் கையூட்டு நுழையாது என்று யார் உறுதி கூறமுடியும்? கையூட்டைக் கண்டுபிடிக்க வழி செய்தலைக் காட்டிலும் கையூட்டு நிகழாதவாறு அலுவல் நெறிகளை அமைப்பதிற் கருத்துச் செலுத்த வேண்டும். இது பற்றி அரசியற் சான்றோராகிய வள்ளுவர் யாது கூறுகின்றார்?

நாடொறும் நாடுக மன்னன்: வினைசெய்வான்
கோடாமை கோடா துலகு (520)

நாடொறும் நாடி முறைசெய்யா மன்னவன்
நாடொறும் நாடு கெடும் (553)

மக்களின் வேண்டுகோள் தூங்காதபடியும், திட்டங்கள் காலங் கடவாதபடியும் உடனுக்குடன் செய்யப்படுகின்றனவா என்று மேலவர்கள் தம் கீழவர்களை நாள்தொறும் கவனிக்க வேண்டும் என இடித்துக் காட்டுகின்றார் ஆசிரியர். தாமதமின்றிக் காரியம் நடக்குமென்றால், கொடுக்க யாருக்குத்தான் கை நீளும்? இன்னும் ஒன்று வள்ளுவப் பெருமான் சொன்னபடி செய்தால், சிலவகைக் கையூட்டுக்கள் ஒழிந்து போம் என்று நம்பலாம்.

காட்சிக் கெளியன் கடுஞ்சொல்லன் அல்லனேல்
மீக்கூறும் மன்னன் நிலம் (386)

இன்று பெரிய வினைஞர்களைப் பார்க்க வேண்டுமென்றால் பணியாளன் அருள் வேண்டும். எழுத்து மூலம் சில எழுதினாலும் அவை மேலவர் பார்வைக்கு எட்டுமென்று சொல்ல முடியுமா? கட்டில் எடுத்து வைத்தாற்றானே கண்ணுக்குப் புலப்படும்? ஆதலின் அமைச்சர்களும் அமைச்சரனையவர்களும் நாள்தோறும் அரைமணி நேரமோ வாரத்தில் ஒரு பொழுதோ தம் அலுவலகத்திற்கு வெளியே வந்து தடையின்றி யாரையும் பார்க்க இசைவது, குறை கேட்பது, முறை காண்பது என்று வழக்கப்படுத்திக் கொள்ளவேண்டும். அங்ஙனம் மிக்க அன்பும் நேரான எளிமையும் இருக்குமாயின், மக்கட்கு இறையென்று வைக்கப்படும் என்ற வள்ளுவர்

பாராட்டு அவர்கட்குக் கிடைக்கும். மக்கள் வாக்கும் மன மாரக் கிடைக்கும். வள்ளுவர் நல்லரசு வேண்டும் நடை முறையெல்லாம் அறிந்த அரசியல் மேதை. ஆதலின் இந்திய அரசியல் வாழ்வில் செல்வார் அனைவர்க்கும் திருக் குறளறிவு இன்றியமையாதது என்பது வெளிப்படை.

**இன்பம்:**

உலக நலம் என்பது சமுதாய நலம். சமுதாய நலம் என்பது இல்லற நலம். இல்லறம் நலம் என்பது கணவன் மனைவியின் காதல் நலம். காதல் சிறவாவிட்டால் ஞாலத் தில் எத்துறையிலும் எப்பண்பும் சிறவாது. எம்முயற்சியும் விழலுக்கு இறைத்த நீராகிவிடும்.

உலகிடை வேறுவகையால் வரும் இன்பத்திலும் காத லர்தம் இன்பம் சிறந்தது. ஐயமில்லை. ஆனால் வேறு வகையால் வரும் துன்பத்திலும் காதலர்களுக்குள் வரும் துன்பம் கொலையனையதன்றோ? காதலர்தம் வேற்றுமை அறத்தைக் கெடுக்கவும அரசியலைக் கெடுக்கவும் காண்கின் றோம். ஒருவர்பொறை இருவர் நட்பு என்பது குடும்பத்தின் தலையாய பண்பு. உயிரொன்று என இலக்கியம் பாராட்டும் காதலர்களுக்குள்ளும் நீண்ட வாழ்நாளில் நெஞ்சு பொறுக்க மாட்டாச் சில பிணக்குக்கள் நிகழவே செய்யும். மனப் பூசல்கள் வஞ்சகத்தாலன்றி, வாய்வார்த்தையால் வளரவே செய்யும்; சிலசமயம் தடிக்கவும் செய்யும். அப்போது காத லின் நிலையைப் புரிந்துகொள்ள வேண்டும். புரிந்து கொள்ளல் என்பது பொறுத்துக் கொள்ளுதலாகும். பொறுத்துக் கொள்ளாதார் புரியாதவரே. பிணக்கைப் புரிந்து கொண் டார் இன்பப் பெருமை எய்துவர்.

உப்பமைந் தற்றால் புலவி அதுசிறிது
மிக்கற்றால் நீள விடல். (1302)

பிணக்கம் அளவாகுக, மிகுதியாக்க வேண்டாம் என்று இல்லறப் பெருமகனாகிய வள்ளுவர் காதலர்களுக்கு நுண்ணிய நாகரிக முறையில் புலப்படுத்துவர். அறம் பொருள் இன்பம் என்ற முத்திற வாழ்விற்கும் எத்திறத் தாலும் வழிகாட்டுவது திருக்குறள்.

# 14. நீதி விளக்கம்

ஆத்திசேர் கொன்றை அழகுதமிழ் மூதுரை
பாத்திசேர் நல்வழி பண்புலகம்-பூத்த
நறுந்தொகை நன்னெறி ஏழும் குழந்தைக்
குறுந்தமிழ் என்றறிந்து கொள்.

மக்கள் நினைவுகொள்ளுதற் கென்று சில முறைகளைக் கையாளுகின்றோம். வெண்பாவால் தொகைப்படுத்தல் அம்முறைகளுள் ஒன்று. 'முருகு பொருநாறு பாணிரண்டு' என்ற வெண்பா பத்துப்பாட்டினையும், 'நற்றிணை நல்ல குறுந்தொகை' என்ற வெண்பா எட்டுத் தொகையினையும், 'நாலடி நான்மணி நானாற்பது' என்ற வெண்பா பதினெண் கீழ்க்கணக்கினையும், 'உந்தி களிறு உயர்போதம் சித்தியார்' என்ற வெண்பா பதினுன்கு மெய்ப்பனுவல் களையும் இலக்கியப்பட்டியல் செய்துள்ளன. ஓரின நூல்களை நினைவு கொள்ளவும், ஒன்று படித்தபின் ஒன்றைப் படிக்கவும், நூலகங்களில் இனநூல்களை வரிசைப்படுத்திக் கொள்ளவும் இப்பட்டியல்கள் உதவுகின்றன. அழியாமற் காப்பதற்கும் ஆராய்ச்சி செய்வதற்கும் இம்முறை வழி செய்திருப்பது கண்கூடு. வெண்பா வடிவில் இல்லாவிடினும், ஐம்பெருங்காப்பியம் ஐஞ்சிறு காப்பியம் பன்னிருதிருமுறை என்ற தொகைத் தொடர்கள் எவ்வளவோ ஆய்வுச்சுடரைத் தூண்டியுள்ளன. இம் மரபுப்படி ஆத்திச்சூடி கொன்றைவேந்தன் மூதுரை நல்வழி உலக நீதி நறுந்தொகை நன்னெறி என்ற ஏழு அற நூல்களும் ஓரினமாக எனது மேலை வெண்பாப் பட்டியலில் தொகை பெற்றுள. எட்டுத்தொகை பத்துப்பாட்டு பதினெண்கீழ்க் கணக்கு என்றாற்போல இவற்றையும் ஏழிளந் தமிழ் என வழங்கலாம் என்பது என் கருத்து.

ஏழிளந்தமிழ் கடவுள் வாழ்த்துக்கள் நீங்கலாக 403 செய்யுள் கொண்டது. ஓரடிச்செய்யுள் 245 ; வெண்பா 110 ; எண்சீர் விருத்தம் 12. ஈரடி முதல் ஆறடிவரை செய்யுள் 36. ஆத்திசூடி கொன்றைவேந்தன் முழுதும் ஓரடிச் செய்யுட்கள். மூதுரை நல்வழி நன்னெறி மூன்றும் வெண்பா யாப்பின. உலகநீதி எண்சீர் விருத்த யாப்புடையது. நறுந்தொகை ஓரடிமுதல் ஆறடிவரை விரவியது.

## கடவுள் வாழ்த்துக்கள்

1. ஆத்தி சூடி யமர்ந்த தேவனை
   ஏத்தி யேத்தித் தொழுவோ மியாமே.

2, கொன்றை வேந்தன் செல்வன் அடியிணை
   என்றும் ஏத்தித் தொழுவோ மியாமே.

3. வாக்குண்டாம் நல்ல மனமுண்டாம் மாமலராள்
   நோக்குண்டாம் மேனி நுடங்காது-பூக்கொண்டு
   துப்பார் திருமேனித் தும்பிக்கை யான்பாதம்
   தப்பாமற் சார்வார் தமக்கு.

4. பாலுந் தெளிதேனும் பாகும் பருப்புமிவை
   நாலுங் கலந்துனக்கு நான் தருவேன் - கோலஞ்செய்
   துங்கக் கரிமுகத்துத் தூமணியே நீயெனக்குச்
   சங்கத் தமிழ்மூன்றுந் தா.

5. உலக நீதிப் புராணத்தை யுரைக்கவே
   கலைகளாய்வருங் கரிமுகன் காப்பு.

6. பிரணவப் பொருளாம் பெருந்தகை யைங்கரன்
   சரணவற் புதமலர் தலைக்கணி வோமே.

7. மின்னெறி சடாமுடி விநாயகன் அடிதொழ
   நன்னெறி வெண்பா நாற்பதும் வருமே.

ஏழு கடவுள் வாழ்த்தும் கணபதி மேலவாக உள்ளன; எனினும் 'ஆத்தி சூடி அமர்ந்த தேவன்' என்ற தொடர்

சிவனைக் குறிப்பதாகவும் கொள்ள இடங்கொடுக்கும். நூலகத்துள் சிவன் திருமால் வழிபாடு சொல்லப்படுகின்றது. தெய்வம் இகழேல் என ஆத்திசூடியும், தெய்வம் சீறிற் கைதவம் ஆளும் எனக் கொன்றை வேந்தனும், தெய்வத்தை ஒருநாளும் மறக்கவேண்டாம் என உலக நீதியும் பொதுமைப்படத் தெய்வ நம்பிக்கை ஊட்டலும் காண்க. ஆத்திசூடி, கொன்றைவேந்தன், நன்னெறி, உலகநீதி இவற்றின் கடவுள் வாழ்த்துக்கள் தத்தமக்கு உரிய யாப்பில் அமையவில்லை என்பது காணத்தகும். நறுந் தொகை பலவடியது ஆதலின் அதன் வாழ்த்து ஈரடியாக இருப்பது முரணில்லை. மூதுரை நல்வழி வாழ்த்துக்கள் வெண்பாவில் இருப்பது பொருந்தும். உலக நீதியின் ஆசிரியர் முருகவேள்பாற் பெரும்பற்றினர். மேலும் உலக நீதி என்ற நூற்பெயரைப் பன்னிரண்டாவது விருத்தத்தில் சொல்லியும் உள்ளார். ஆதலின் அதன் கரிமுகக் கடவுள் வாழ்த்து ஐயத்திற்கு உரியது. இவ்வேழு பாடல்களும் ஒரு வகையில் வெண்பாவின் பாற்படும் ஈரடியுடைய ஐந்து வாழ்த்தும் குறள் வெண் செந்துறை என்ற வெண்பாவின் இனமாகக் கொள்ளவேண்டும்.

உலகநீதி நன்னெறி என்பவை ஆசிரியன் வைத்த பெயர்களே. கடவுள் வாழ்த்திற் குறிப்பிட்டபடி 'நன்னெறி வெண்பா' என்பதே பெயராகி இருந்து பின்னர்க் குறைந் திருக்கலாம். பாரதம் பாடிய பெருந்தேவனார் என்பதனை ஒப்பு நோக்குக கடவுள் வாழ்த்தின் முதற்சீர்களான ஆத்திசூடி கொன்றைவேந்தன் என்பன அந்நூற்பெயர்கள் ஆயின. கொன்றை வேய்ந்தோன் என்பது கொன்றை வேந்தன்என மரூஉவாயிற்றுப் போலும், 'வாக்குண்டாம்' என்ற கடவுள் வாழ்த்தின் முதற்சீரும் மூதுரைக்கு ஒரு பெயராய் வழங்குதல் உண்டு 'நற்றமிழ் தெரிந்த நறுந் தொகை' என்றபடி நறுந்தொகை என்பது அதிவீரராமர் வைத்த பெயர். ஆயினும் 'வெற்றிவேற்கை' என்று தொடங்கும் பாயிரத்தின் முதற்சீரும் நறுந்தொகைக்கு ஒரு பெயராய் வழங்கும். இப்பாயிரம் பிறராற் பாடப்பெற்றது.

நல்வழிப்பெயர் கடவுள் வாழ்த்திலோ நூலகத்தோ இல்லை; வழி வழி வரும் பெயராகும். உலகநீதி ஓரளவு உலகநாதன் என்னும் ஆசிரியன் பெயரோடு தொடர்புடையது. மூதுரை நல்வழி நன்னெறி நறுந்தொகை என்பன பொருள்பற்றிய காரணப் பெயர்கள். நறுந்தொகை என்று பெயர் இருந்தாலும், அதன் செய்யுட்கள் தொகுப்பில்லை. ஒருவர் முறையாகப் பாடியனவே. நல்ல அறங்களையெல்லாம் ஒருசேரக்கொண்டிருத்தல் என்பது கருத்து. ஒரு நூலுக்கு முதற்சீராலும் பெயராகலாம் எனற வழக்கு ஆத்திசூடி கொன்றைவேந்தன் காலத்திலிருந்து வந்தது என்று கொள்ள வேண்டும்.

ஏழிளந் தமிழ் சிறுவயதிற் கற்பிக்கவென்றே அறமும் தமிழும் தழுவ நாற்பெரும் புலவர்களால் இயற்றப் பட்டவை. இவை பதினெண்கீழ்க்கணக்கில் உள்ள பல அறநூல்களுக்கு அறத்தரமோ தமிழ்த்தரமோ குறைந்தன வல்ல. ஒரு வெண்பாவில் மூவறங் கூறும் திரிகடுகமும், நாலறம் மொழியும் நான்மணிக்கடிகையும், ஐயறஞ் சொல்லும் சிறுபஞ்ச மூலமும், ஆறறங் கரையும் ஏலாதியும் ஒருபாவிற்குள் இத்தனை யறங்கள் வைப்பதெனப் பொருள் வேலி செய்து கொண்டமையின், இலக்கிய ஓட்டத்துக்கு அவ்வளவு இடம் கொடுக்கவில்லை.

கணக்காயர் இல்லாத ஊரும் பிணக்கறுக்கும்
மூத்தோரை இல்லா அவைக்களனும்—பாத்துண்ணும்
தன்மையி லாளர் அயலிருப்பும் இம்மூன்றும்
நன்மை பயத்தல் இல (திரி. 12)

இடைவனப்பும் தோள்வனப்பும் ஈடில் வனப்பும்
நடைவனப்பும் நாணில் வனப்பும்—புடைசால்
கழுத்தின் வனப்பும் வனப்பல்ல எண்ணோடு
எழுத்தின் வனப்பே வனப்பு (ஏலாதி. 74)

இவ்வாறு அடுக்கிய அறம் இந்நூல்களின் போக்கு ஆதலின் உவமையும் பிறவும் எளிதிற் புக இயலவில்லை.

இங்ஙனம் அன்றி மூதுரை நல்வழி நன்னெறியில் உவமைகள் மலிந்துள்ளன. ஒவ்வொரு வெண்பாவும் ஓரறத்தின் விளக்கமாக உள்ளது. கொன்றைவேந்தன் நறுந்தொகை போல ஓரடியுடைய முதுமொழிக் காஞ்சியும், நல்வழி நன்னெறி போல நாற்பது செய்யுளுடைய இன்னு நாற்பது இனியவை நாற்பதும் பதினெண்கீழ்க்கணக்கில் இல்லாமல் இல்லே. ஔவையாரின் நூல்கள் பதினெண்கீழ்க்கணக்கு தொகுக்கப்பட்ட காலத்துத் தோன்றியிருக்குமேல் அக்கணக்கில் இடம் கொண்டிருக்கும்.

"தொன்மையவாம் எனுமைவையும் நன்ருகா இன்று
தோன்றியநூல் எனுமெவையும் தீதாகா"

என்பர் உமாபதி சிவனுர். ஆதலின் முன்னேத் தொகையில் சேராமையினுல் ஏழிளந்தமிழ் பெற்றி குன்றியவையல்ல.

## சிவப்பிரகாசர்:

நன்னெறி இயற்றிய சிவப்பிரகாசர் துறவிப்புலவர். சீகாளத்திப்புராணம் பிரபுலிங்கலீலே நால்வர் நான்மணி மாலே திருவெங்கைக் கோவை என்றின்ன இருபது நூல்களின் ஆசிரியர். கற்பனேக் களஞ்சியம் என்று புலவருலகம் இவரைப் பாராட்டுவது உண்டு இப்புலமகன் தம் முதிர்ந்த புலமையில் இளேஞர் நன்னெறியை யாத்தார். பிறர்க்கு எந்நிலேயிலும் இயன்ற உதவி செய்யவேண்டும் என்பது நன்னெறி முழுதும் ஓடிக்கிடக்கும் சாரக் கருத்து. நெறிகளே விளக்கப் பிரகாசர் ஆண்ட உவமைகள் இரு திறத்தவை. உடலுறுப்புக்களே உவமைப் படுத்துவது ஒரு திறம்.

பூவிற் பொலிகுழாய்! பூங்கை புகழவோ
நாவிற் குதவும் நயந்து.
மண்டு பிணியால் வருந்து பிறவுறுப்பைக்
கண்டு கலுழுமே கண்.
முளேக்கும் எயிறு முதிர்ச்சுவைநா விற்கு
விளேக்கும் வலியனதாம் மென்று.
மெய்சென்று தாக்கும் வியன்கோல் அடிதன்மேற்
கைசென்று தாங்கும் கடிது

நல்லவர்கள் பாராட்டாதார்க்கும் முற்பட்டு உதவுவர் ; கை புகழை எதிர்பாராமல் நாவிற்கு உதவவில்லையா ? பிறர் படும் துன்பம் பார்க்கப் பொறுமல் பெரியோர் வருந்துவர் ; ஏனை உறுப்புக்கள் உறும் நோய்க்குக் கண் கலங்கவில்லையா ? கற்றேர் கைம்மாறு வேண்டாமல் முடிந்த உதவிகளை ஆற்றுவர் ; பற்கள் கடின உணவுகளை மென்று எளிமைப்படுத்தி நாவினுக்கு வழங்கவில்லையா ? உடல் மேற் படவரும் அடியை இடைமறித்துக் கை விரைந்து நீக்குவதுபோல, மற்றவர் இடுக்கண்களைப் பெரியவர்கள் குறுக்கிட்டுக் காப்பர். பிறவுறுப்புக்கள் அணிபூண்டாலும் அணிவேண்டாக் கண்ணுக்கு ஈடாகா எனவும், ஒன்பான் வழியுடைய உடம்பில் வெளிப்போகாது உயிருப்பது புதுமை எனவும், கண் இரண்டானலும் காண்பது ஒரு பொருளையே எனவும், மெய்சார் உவமைகள் நனி கூறுவது சிவப்பிரகாசரின் தனியியல்பாகும். உடம்பிலாதார் யாருமிலர் ஆதலின், தற்சார்ந்த இவ்வுவமைகள் குழந்தைகட்கு எளிதிற் புரியும் என்பதில் ஐயமில்லை.

மெய்சார் உவமமே யன்றிக் கதைகளையும் உவமப் படுத்தல் ஆசிரியரின் இன்னெரு திறம். சாக்கிய நாயனர் கல்லெறிவு, மன்மதன் மலரெறிவு, அகத்தியர் கடல் குடிப்பு, சிவன் சடைமேல் பாம்பிருப்பு, மேருமலை வளைவு, விந்தமலை தாழ்வு முதலிய கதைகள் உவமைகள் ஆகின்றன. இக்கதையறிவு குழந்தைகள் பின்னர் சைவப் புராணங்களைப் படிக்கத் துணைசெய்யும் என்ற நோக்கொடும் ஆசிரியர் சொலியிருக்கலாம். கன்றுவிட்டுப் பால்கறத்தல், நெல்லில் உமிநீக்கம், எறும்பூரக் கற்குழிதல் என்றின்ன இயல்புவமைகளும் கலந்துள. உவமை வகை எதுவாயினும், குழந்தை நிலையை உட்கொண்டே நன்னெறி எழுதப்பட்டது என்பது தெளிவு. இங்ஙன் எழுதுமுறையிலும் இன்னெரு திறம் இவர்பால் உண்டு.

**எந்தைநல் கூர்ந்தான் இரப்பார்க்கீந் தென்றவன்**
**மைந்தர்தம் ஈகை மறுப்பரோ?—பைந்தொடீ!**

நின்று பயனுதவி நில்லா அரம்பையின்கீழ்க்
கன்றும் உதவுங் கனி.

எழுத்தறிவார் கல்விப் பெருக்கம் அனைத்தும்
எழுத்தறிவார்க் காணின் இலையாம்;—எழுத்தறிவார்
ஆயுங் கடவுள் அவிர்சடைமுன் கண்டளவில்
வீயுஞ் சுரநீர் மிகை.

இவ்வாறே முன்னிரண்டு அடியில் அறமும் பின்னிரண்டு அடியில் விளக்கமும் நாற்பது வெண்பாவிலும் வைப்புமுறை மாறாது வருகின்றது. பொருளும் உவமையும் இடமாறாது கிடத்தல் குழந்தைக்கல்விக்கு எளிது என்று கருதினர் போலும். வினாக்கேட்பதும் கல்வி முறைகளுள் ஒன்று. இம்முறையால் கேள்வியைப் புரிந்து கொண்டனரா என்பதும் பெறப்படும். உய்த்துணர்ந்து சொல்லும் பயில்வும் வளரும்.

—வெள்ளம்
தடுத்தல் அரிதோ தடங்கரைதான் பேர்த்து
விடுத்தல் அரிதோ விளம்பு.

—நனிவிளைவில்
காயினும் ஆகுங் கதலிதான் எட்டிபழுத்
தாயினும் ஆமோ அறை.

—வெள்ளம்
வருவதற்கு முன்னர் அணைகோலி வையார்
பெருகுதற்கண் என்செய்வார் பேசு.

வெண்பா வினாநடையாக இயங்குவதும், விளம்பு அறை பேசு என்றாங்கு வியங்கோளாக இறுவதும் ஆசிரியர் கையாண்ட கல்வி முறைக்குச் சான்று. இருவகை யுவமம், உவமைக் கிடக்கை, வினாவிடை முறை என்றிவற்றைச் சிவப்பிரகாசர் முறை அல்லது சிவப்பிரகாசம் என்று இக்காலத்துக் கேற்பக் குறியிட்டால் தவறில்லை.

அதிவீரராமர் :

அதிவீரராம பாண்டியர் அரசப் புலவர். நைடதம் கூர்ம புராணம் இலிங்க புராணம் திருக்கருவைப் பதிற்றுப் பத்தந்தாதி என்றின்ன பன்னூலாசிரியர். குழந்தைக்கென்றே பாடிய இவர்தம் நறுந்தொகை புதிய பல அமைப்பு உடையது. பாயிரம் பாராட்டுவது போல, மெய்யாகவே 'நற்றமிழ் தெரிந்த நறுந்தொகை' தான். சங்கப்பாண்டியரின் புறநானூற்றுச் செய்யுட்களின் கருத்துக்கள் நறுந்தொகையில் ஒளி விடுகின்றன. யார்க்கும் கல்வியின் இன்றியமையாமையை வன்புறை செய்தவன் ஆரியப்படைகடந்த நெடுஞ்செழியன், அவன் கொள்கையை மீண்டும் வலியுறுத்த எண்ணிய அதிவீரராமர் பத்தடிப் புறப்பாடலைக் குழந்தை கொள் நிலைக்கேற்ப ஒன்பதடியாக ஐந்து செய்யுட்களாக யாத்தார்.

புறநானூறு

உற்றுழி யுதவியும் உறுபொருள் கொடுத்தும்
பிற்றைநிலை முனியாது கற்றல் நன்றே ;
பிறப்போ ரன்ன உடன்வயிற் றுள்ளும்
சிறப்பின் பாலால் தாயுமனந் திரியும் ;
ஒருகுடிப் பிறந்த பல்லோ ருள்ளும்
மூத்தோன் வருக வென்னாது அவருள்
அறிவுடை யோனாறு அரசுஞ் செல்லும் ;
வேற்றுமை தெரிந்த நாற்பா லுள்ளும்
கீழ்ப்பால் ஒருவன் கற்பின்
மேற்பால் ஒருவனும் அவன்கட் படுமே.

நறுந்தொகை

1. கற்கை நன்றே கற்கை நன்றே
பிச்சை புகினும் கற்கை நன்றே ;

2. கல்லா ஒருவன் குலநலம் பேசுதல்
நெல்லினுட் பிறந்த பதரா கும்மே ;

3. நாற்பாற் குலத்தின் மேற்பால் ஒருவன்
கற்றில னாயிற் கீழிருப் பவனே ;

4. எக்குடிப் பிறப்பினும் யாவரே யாயினும்
அக்குடியிற் கற்றோரை மேல்வரு கென்பர் ;

5. அறிவுடை ஒருவனை அரசனும் விரும்பும்.

'பிற்றை நிலை முனியாது கற்றல் நன்றே, என்ற நெடுஞ் செழியன் கருத்தினைப் பிச்சை புகினும் கற்கை நன்றே என வலியுறுத்துவர் அதிவீரராமர். யாது கொடுத்தாயினும் படிக்கவேண்டும் என்ற புறக்கருத்தினும், பிச்சை எடுத்தா யினும் படிக்கவேண்டும் என்ற நறுந்தொகைக் கருத்து ஏழை எளியவர்க்கும் கல்வியை வற்புறுத்தலை அறியலாம். 'எழுத்தறிவித்தவன் இறைவன் ஆகும்' என்று நூலின் முதற் செய்யுளைத் தொடங்குவதனால், அதிவீரராமரின் கல்விச் சிந்தனை பெறப்படும்.

இப் பாண்டிப்புலவர் அறங்களைச் சொல்லும் போக்கில் நிரலினிமை காணப்படும். கல்விக்கழகு செல்வர்க்கழகு வேதியர்க்கழகு மன்னர்க்கழகு வைசியர்க்கழகு உழவர்க் கழகு மந்திரிக்கழகு தந்திரிக்கழகு உண்டிக்கழகு பெண்டிர்க் கழகு குலமகட்கழகு விலைமகட்கழகு அறிஞர்க்கழகு வறிஞர்க் கழகு எனப்பதினான்கு அழகு வரிசைகள் ; பெரியரும் அல்லர் சிறியரும் அல்லர் பிள்ளைகள் அல்லர் உறவினர் அல்லர் பெண்டிரும் அல்லர் என அல்லர் வரிசை ஐந்து ; யானைக் கில்லை பூனைக்கில்லை ஞானிக்கில்லை சிதலைக்கில்லை முதலைக் கில்லை அறிவிலோர்க்கில்லை நலிந்தோர்க்கில்லை கெட்டோர்க் கில்லை என இல்லை வரிசை எட்டு ; அனைவரும் பதரே மூர்க்கனும் பதரே வணிகரும் பதரே ஏழையும் பதரே பாராப் பேதையும் பதரே ஏகும் பேதையும் பதரே கொடுக்கும் பேதையும் பதரே எனப் பதர் வரிசை ஏழு ; கோற்கஞ்சும்மே புலிக்கஞ்சும்மே பாம்பிற்கு மிகவஞ்சுமே என அஞ்சுவரிசைகள் மூன்று. இங்ஙனம் பலவறங்களை ஒரு பயனிலை நடையிற் கூறிக்காட்டும் இலக்கியர் அதிவீர ராமர்.

இன்னொரு பெற்றியும் இவர் பால் உண்டு. ஓரறத்தை முன்வைத்து அதன் விளக்கமாகத் தொடர்ந்து பல காட்டுக்களை அவரே தருகுவர். ஐம்புலனை அடக்கியவர் தம் ஆற்றலுக்கு வானவர்தலைவன் இந்திரனே சான்று என்று வள்ளுவர் அறமும் விளக்கமும் ஒருசேரக் காட்டு வதையும் ஒப்பு நோக்குக.

அறம்

உடைமையும் வறுமையும் ஒருவழி நில்லா

அறத்தின் விளக்கம்

1. குடைநிழ லிருந்து குஞ்சரம் ஊர்ந்தோர்
நடைமெலிந் தோரூர் நண்ணினு நண்ணுவர்;

2. சிறப்பும் செல்வமும் பெருமையும் உடையோர்
அறக்கூழ்ச் சாலை அடையினும் அடைவர்;

3. குன்றத் தனையிரு நிதியைப் படைத்தோர்
அன்றைப் பகலே அழியினும் அழிவர்;

4. எழுநிலை மாடங் கால்சாய்ந் துக்குக்
கழுதை மேய்பா ழாயினும் ஆகும்;

5. அறத்திடு பிச்சை கூவி யிரப்போர்
அரசரோ டிருந்தர சாளினும் ஆள்வர்;

6. பெற்றமும் கழுதையும் மேய்ந்த அப்பாழ்
பொற்றொடி மகளிரும் மைந்தருங் கூடி
நெற்பொலி நெடுநக ராயினும் ஆகும்.

உடைமை நிலையாதது என்று தாம் சொல்லிய அறத்தை விளக்கு முகத்தான், அரசுடைமை பெருமை யுடைமை செல்வமுடைமை பெருமனையுடைமை என்றி வற்றின் அழிவுகளை எடுத்துக்காட்டுவர். யாக்கை இளமை செல்வம் என உள்ளது நிலையா என்று சொல்வதுதான் பொதுவான அறமரபு. அதிவீரராமரோ வறுமையும்

நிலையாது எனவும், வறியவர் செல்வராய் அரசராய் உயர் வர் எனவும், புதுமுறையில் அறம் கூறக் காண்கின்றோம். பிச்சைக்கார ஒருவனும் அரசாளலாம் என்ற கருத்தால் குடியரசு முறையைக் குறிப்பிற் காட்டுவர் போலும்.

நறுதொகையாசிரியர் சில அறங்களைப் பொறுக்கி யெடுத்து அவற்றைப் பல உலகியல் மேற்கோள்களால் தெளிவு செய்குவர். அறப்பொறுக்கில் புதிய சில அறங் களும் இலங்குகின்றன. இவை நடைமுறை உலகியலைக் காட்டுகின்றன.

1. சிறியோர் செய்த சிறு பிழை யெல்லாம்
பெரியோ ராயிற் பொறுப்பது கடனே;

2. சிறியோர் பெரும்பிழை செய்தன ராயின்
பெரியோர் அப்பிழை பொறுத்தலும் அரிதே;

3. பொய்யுடை ஒருவன் சொல்வன் மையினுற்
மெய்போ லும்மே மெய்போ லும்மே;

4. மெய்யுடை ஒருவன் சொலமாட் டாமையால்
பொய்போ லும்மே பொய்போ லும்மே;

5. தன்மனை யாளைத் தாய்மனைக் ககற்றிப்
பின்பவட் பாராப் பேதையும் பதரே.

சிறியவர்கள் அளவினுங் கடந்து பெரும்பிழை செய்தால், பெரியவர்கள் அதனைப் பொறுக்கமுடியாது என்பது இவர் தம் எச்சரிக்கை. சொல்வன்மையினுல் பொய் மெய்யாகத் தோன்றும், மெய் பொய்யாகத் தோன்றும் எனச் சொல்வன்மையை ஒருவாறு இகழ்ந்துரைப்பர். பெண்ணி னைப் பேதை என்றல் வழக்கு. பிறந்தகம் விட்டு மனைவியாக வந்தவளைப் பின்பும் பிறந்தகத்துக்கே போகச் சொல்லும் ஆணைப் பேதை என மாற்றியுரைப்பர் அதிவீரர். இவர் அரசராதலின் இளங்கோப்போலத் தம் நறுந்தொகையில் அரசநீதிகளை அழுத்தமாகக் கூறியிருக்கக் காணலாம்.

குடியலைத் திரந்துவெங் கோலொடு நின்ற
முடியுடை இறைவனும் மூர்க்கனும் பதரே

கொடுங்கோல் வேந்தனைப் பதர் என்றளவில் சொல்லி யொழியாது மூர்க்கன் என்று வசைபாடுகின்றார். இக்கடுஞ் சொல் அரசப்புலவ வாயிலிருந்து வருவதால் அவர்தம் நேர்மை விளங்கும்.

உலகநாதர்:

உலகநீதி பாடிய உலகநாதரைப்பற்றி வரலாற்றுக் குறிப்பு இல்லை. பாடிய எண்சீர் விருத்தங்கள் பன்னிரண்டே. 61 நீதிகள் உள. மனத்துக்கண் மாசிலனாதல் அனைத்தறன் என்று வள்ளுவர் எதிர்மறைபட அறத்துக்கு இலக்கணம் வகுப்பர். வெகுளாமை கொல்லாமை புறங் கூறாமை அழுக்காறாமை பயனிலசொல்லாமை என வரும் தலைப்புக்களையும் நோக்குக. எதிர்மறையாக அறங் கரைதலும் ஒருமுறை என்பது இன்னாநாற்பது நூலால் போதரும். ஆதலின் உலகநீதியாசிரியர் 'ஓதாமல் ஒரு நாளும் இருக்க வேண்டாம், ஒருவரையும் பொல்லாங்கு சொல்லவேண்டாம்' என்ற நடையை நூன்முழுதும் கையாள்வார். வேண்டா என்ற வினைவடிவே பழைய மரபு. இவரோ 'வேண்டாம்' என்ற வினைமுற்றை யாண்டும் ஆளுகின்றார். வேண்டாம் என்பது வேண்டா ஆம் என்பதன் மரூஉ. மருந்தென வேண்டாவாம், (942) பணியுமாம், அணியுமாம் (978) என்ற திருக்குறள் நடையில் ஆம் என்ற ஒரு துணைவினை முற்று முற்றின்மேல் வருவதைப் பார்க்கின்றோம். இங்ஙனம் வேண்டாவாம் என வந்த தொடர் வேண்டாம் என்று பிற்காலத்துக் குறுகிற்று.

நெஞ்சறிவுறுத்தல் என்ற முறையில் அமைந்தது இந் நீதிநூல். குழந்தைகட்கு முழுதும் பொருந்தியநூல் என்று சொல்ல இயலாவிடினும், அவைகள் படிக்கும் எளிய ஓட்ட நடையில் இயங்குவன. கடவுள் வாழ்த்து கரிமுகனைப்பற்றி இருந்தாலும், மயிலேறும் பெருமானை வாழ்த்தாய் நெஞ்சே

என்ற முருகவணக்கமே நூல் முழுதும் காணப்படுகின்றது. "அருந்தமிழால் அறுமுகனைப் பாடவேண்டி ஓதுவித்த வாசகத்தால் உலகநாதன் உண்மையாய்ப் பாடிவைத்த உலகநீதி" என்பது ஆசிரியரின் வாய்மொழி. ஆதலின் இவர் புறந்தொழா அறுமுகவழிபாட்டினர் என்பது தெளிவு. எனவே, கரிமுகக் கடவுள் வாழ்த்து இவர் பாடலா என்ற ஐயத்திற்கு உரியதாகும்.

உலகநாதர் அறங்களை அழுத்தமாகச் சொல்லும் போக்கினர். அவ்வழுத்தம் காட்ட 'ஒருநாளும்' என்ற சொல்லை அடிக்கடி பயன்படுத்துவர்.

'ஓதாமல் ஒருநாளும் இருக்க வேண்டாம்'
'மாதாவை ஒருநாளும் மறக்க வேண்டாம்'
'நஞ்சுடனே ஒருநாளும் பழக வேண்டாம்'
'அடுத்தவரை ஒருநாளும் கெடுக்க வேண்டாம்'
'தருமத்தை ஒருநாளும் மறக்க வேண்டாம்'

இவ்வாறு இன்னும் இச்சொல் பயிலும் அடிகள் பலவுள. புறஞ் சொல்லித் திரியவேண்டாம், பாராட்டித் திரிய வேண்டாம், கலகமிட்டுத் திரியவேண்டாம் என்றபடி திரிய என்ற செயவென் வினையெச்சம் பயின்றுவரக் காணலாம். சிறிய நூலாயினும் புதிய அறங்கள் இல்லாமல் இல்லை. நடைமுறைக்கு வேண்டும் அறங்கள் நடைமுறை மொழியில் ஓட்டமாகச் சொல்லப்பட்டுள.

'வாழாமற் பெண்ணை வைத்துத் திரிய வேண்டாம்'
'மனையாளைக் குற்றமொன்றும் சொல்ல வேண்டாம்'
'இருதாரம் ஒருநாளும் தேட வேண்டாம்'
'கூறுக்கி ஒருகுடியைக் கெடுக்க வேண்டாம்'
'அஞ்சுபேர் கூலியைக் கைக்கொள்ள வேண்டாம்'

வேண்டாம் என்பது இலக்கண முறையில் வினை முற்றாக இருந்தாலும், ஆசிரியரின் ஓர் உணர்ச்சி மெல்

விழையாக அதன்கண் ஒடிக்கிடக்கின்றது. வேண்டாம் வேண்டாம் என்று அடிதோறும் வரும் அச்சொல்லில் நெஞ்சே நீதிக்குப் புறம்பாகப் போகாதே என்று தன் நெஞ்சைப்பரிந்து வேண்டிக்கொள்வது போன்ற பணி வுணர்ச்சி புலனாகவில்லையா? தன் நெஞ்சையே விளித்து அதற்கொரு நெஞ்சிருப்பது போல் வைத்து 'நெஞ்சாரப் பொய்தன்னைச் சொல்ல வேண்டாம்' என்று வேண்டும் போது, 'தன்னெஞ்சறிவது பொய்யற்க' (293) என்ற குறள் மணத்தை நுகர்கின்றோம்.

**ஔவையார்:**

ஔவை என்பது யாரும் அறிந்த முதுதமிழ்ப்பெயர். இப்பெயருடைய பெண்புலவர் வழிவழிச் சிலர். சங்க ஔவை வேறு, ஆத்திசூடி ஔவை வேறு என்பது தெளிவு. எனினும் அறஞ்சொல்லும் புலமை இருவரிடமும் உண்டு. சங்க காலத்தில் அறங்கள் பிறகருத்துக்களோடு விரவிவரும். அறத்திற்கென்றே தனிப்பாடல் செய்யும் மரபு அரிது, புறநானூற்றில் ஒரு சில தனி அறப்பாடல்களே உள.

நாடா கொன்றோ காடா கொன்றோ
அவலா கொன்றோ மிசையா கொன்றோ
எவ்வழி நல்லவர் ஆடவர்
அவ்வழி நல்லை வாழிய நிலனே (புறம். 187)

என்ற அறச் செய்யுள் ஒன்றினை யாத்தவர் ஔவையார். அரசன் எவ்வழி குடிகள் அவ்வழி என்ற பழமொழியை ஆடவர் எவ்வழி நிலம் அவ்வழி என்று புதுக்குவர். எவ் விடத்தும் உழைத்தால் உயர்வுண்டு என்று நிலங்கடந்த அறம் கரைவர். சங்க ஔவையும் குழவிமனம் கொண்டவர். அதிகமான்முன் தம்மைக் குழந்தை நிலையில் வைத்துப் பாடியவர்.

யாழொடுங் கொள்ளா பொழுதொடும் புணரா
பொருளறி வாரா வாயினும் தந்தையர்க்கு
அருள்வந் தனவாற் புதல்வர்தம் மழலை
என்வாய்ச் சொல்லும் அன்ன (புறம். 92)

ஆத்திசூடியின் ஔவையார் தமிழ் இலக்கிய வுலகில் புதிய பாதை வகுத்தவர். குழவிகட்கென்றே இலக்கிய வடிவு கண்டவர். அவர்கட்கு வழிவழி தமிழமுது ஊட்டி வரும் அன்னையாவார். ஆத்திசூடி கொன்றைவேந்தன் மூதுரை நல்வழி என்ற நாற்சுவடிகளும் இலக்கண இலக்கிய நெறியில் தனியாய்வுக்கு உரிய எனினும் பொதுப்பட்ட சில சிறப்பினை இவண் காண்பாம். 'கற்க கசடறக் கற்பவை' என்ற வள்ளுவர், கற்கவேண்டும் நூல்களின் பெயர்களை விதந்து குறிக்கவில்லை. குழந்தைகட்கு இன்னின்னவை கற்க வேண்டும் என்று சுட்டிக் காட்டுபவர் ஔவையார்.

துங்கக் கரிமுகத்துத் தூமணியே நீயெனக்குச்
சங்கத்தமிழ் மூன்றுந் தா.
தேவர் குறளும் திருநான் மறைமுடிவும்
மூவர் தமிழும் முனிமொழியும்-கோவை
திருவா சகமும் திருமூலர் சொல்லும்
ஒருவா சகமென் றுணர்.

சங்க இலக்கியமும் அறநூல்களும் சமயநூல்களும் கற்கத்தக்கவை என்று வழிப்படுத்தியிருப்பதை அறிகின்றோம். அதற்கேற்ப இந்நூல்களின் கருத்துக்கள் ஔவை அற நூல்களில் மலிந்து கிடக்கின்றன. ஔவை நூல்களைக் கற்றாலே பழம் பனுவல்களின் அறிவும் சொல்லும் நிரம்பக் கிடைக்கும். 'உண்பது நாழி உடுப்பவை இரண்டே' என்ற புறநானூறு (189) 'உண்பது நாழி உடுப்பது நான்கு முழம்' என்று நல்வழியில் வருகின்றது. கற்பு என்பதற்குக் கல்வி என்ற பொருள் சங்கஇலக்கியத்து உண்டு. 'தொலையாக் கற்ப' என்பது பதிற்றுப்பத்து (43). அளவிட முடியாத கல்வியுடையவனே என்பது பொருள். 'கற்றாரைக் கற்றாரே காமுறுவர் கற்பிலா மூர்க்கரை மூர்க்கர் முகப்பர்' என்ற மூதுரையில், கற்பிலா என்ற தொடர் கல்வியில்லாத என்ற பொருள்படுதல் காண்க.

திருக்குறட் கருத்துக்கள் ஔவை நூல்களில் பலப்பல. சில சுருக்கமாகவும் சில விளக்கமாகவும் உள. மருந்தே

பாயினும் விருந்தோடுண், முற்பகற் செய்யின் பிற்பகல் விளையும், நோன்பென்பது கொன்று தின்னுமை என்ற கொன்றைச் செய்யுட்கள் குறள் வழிப்பட்டவை. 'கொக் கொக்க கூம்பும் பருவத்து' என்ற (490) குறளையும், 'ஓடுமின் ஓட உறுமீன் வருமளவும் வாடியிருக்குமாம் கொக்கு' என்ற மூதுரையையும், 'வெள்ளத்தனைய மலர் நீட்டம்' என்ற (595) குறளையும், 'நீரளவே யாகுமாம் நீராம்பல்' என்ற மூதுரையையும் ஒப்பிட்டுக் காண்க. இனைய காட்டுக்களால், கற்பதற்கு உரியவை என்று மொழிந்த நூல்களின் கருத்துக் களைத் தழுவியே ஔவையார் தம் அறநூல்களை யாத் துள்ளார் என்பது பெறப்படும். ஆதலின் ஔவை நூல்களைச் சார்பு நூல்கள் என்று கூறலாம்.

'அடியின் சிறப்பே பாட்டெனப் படுமே' என்பது (1292 தொல்காப்பியம். அதன்படி எதுகை மோனை முதலிய தொடையழகுகளை ஓரடிக்குள் யாத்து மகிழ்வதே மிக்க சங்கத்திறன்; அடிதோறும் எதுகைமோனை தொடுப்பது சங்கப்பின் வளர்ச்சி என்று கருதவேண்டும்.

பொதுசெய் கம்பலை முதுசெம் பெண்டிர்
முன்னவும் பின்னவும் முறைமுறை தரத்தரப்
புதல்வற் பயந்த திதலையவ் வயிற்று
வாலிழை மகளிர் நால்வர் கூடிக்
கற்பினின் வழாஅ நற்பல வுதவிப்
பெற்றோற் பெட்கும் பிணையை யாகென
நீரொடு சொரிந்த ஈரிதழ் அலரி
பல்லிருங் கதுப்பின் நெல்லொடு தயங்க

(அகம். 86)

இந்த எட்டடிகளிலும் அடியளவில் வேண்டிய எதுகைமோனை இசை நயங்கள் உள. அடியுள் சீர்தோறும் தொடைவிகற் பங்கள் உள்ளன. ஆத்திசூடியும் கொன்றைவேந்தனும் சங்கயாப்புப் போன்றன எனவும் தொல்காப்பிய உரியியலின் ஓரடியமைப்பைப் பின்பற்றுவன எனவும் சுட்டிக்காட்ட

விரும்புகின்றேன். பிற்கால இலக்கணிகள் வெண்பாவையும் கட்டளைக் கலித்துறையையும் விருத்தத்தையும் இலக்கணப் பாவாகப் பயன்படுத்தக் காண்கின்றோம். அம்மாற்றத்தை யொப்ப, இலக்கணத்துக்கு உரிய நூற்பாவை அறஞ் சொல்லும் இலக்கியப்பாவாக முதன்முதலில் பயன்படுத்திக் காட்டினர் ஔவையார்.

### தொல்காப்பியம்-உரியியல்

1. வெம்மை வேண்டல்
2. பொற்பே பொலிவு
3. உயர்வே வயங்கல்
4. மழவுங் குழவும் இளமைப் பொருள
5. விறப்பும் உறப்பும் வெறிப்பும் செறிவே
6. நொசிவும் நுழைவும் நுணங்கும் நுண்மை.

### ஆத்திசூடி-கொன்றை வேந்தன்

1. ஆறுவது சினம்
2. கேள்வி முயல்
3. நூல்பல கல்
4. ஏவா மக்கள் மூவா மருந் து
5. கீழோ ராயினும் தாழ வுரை
6. புலையும் கொலையும் களவுந் தவிர்

கலம்பகம் தூது பிள்ளைத்தமிழ் உலா கோவை போல ஆத்திசூடி என்பதும் சிற்றிலக்கிய வகையுள் ஒன்றாகவும், குழந்தை இலக்கிய வரலாற்றுக்குத் தோற்றுவாயாகவும் பெருமை பெற்றுள்ளது. பாப்பா பாட்டுப் பாடிய பாரதியார் புதிய ஆத்திசூடி எழுதினர். பாரதிதாசனர் ஆத்திசூடிகள் இரண்டு எழுதினர். இங்ஙனம் ஆத்திசூடி யியக்கம் பரவி வரக் காணலாம். மேற்கூறிய ஏழிளந் தமிழும் சிறிய

நூல்கள் என்று பெரும் புலவர்கள், ஒதுக்கவில்லை. அகநானூறு சிலப்பதிகாரம் மணிமேகலைக்கு உரைகண்ட பேராசிரியர் வேங்கடசாமி நாட்டார் இவ்விளந் தமிழுக்கும் உரையாசிரியர் ஆவர் என்பது நினையத்தகும். 'நப்போல் வளை' என்ற சூடியின் பொருளை இன்றும் விளக்க முடியாமல் விழிக்கின்றோம். 'இலவம் பஞ்சிற்றுயில்' என்பதன் பொருள் என்ன ? இலவம் பஞ்சாலான மெத்தையில் படுத்துறங்கு என்பது பொதுப்பட்ட பொருள். இஃது பலர்க்குப் பொருத்தமான அறம் அன்று என்பர் பாரிகாதை பாடிய மகாவித்துவான் இராகவையங்கார். இலவம்பஞ்சு போலத் துயில்க என்பது இவர்தம் பொருள். இன் என்பது ஒப்புப் பொருளில்வந்த ஐந்தாம் வேற்றுமையுருபு எனவும் சிறுகாற்று வீசினும் பஞ்சு அசைவதுபோலச் சிறு அரவம் கேட்டாலும் விழித்துக் கொள்ளும் மென்துயில் வேண்டும் எனவும் இவர் விளக்கம் தருவர். உறக்கம் துயில் என்ற வினைச் சொற்களுக்கு உள்ள வேறுபாட்டை நினைத்து இப்பொருள் செய்வர். பாரதியார்க்கு ஔவை கூறும் அறத்தில் தனிப் பற்று உண்டு. 'சாதி யிரண்டொழிய வேறில்லை என்றே தமிழ் மகள் சொல்லிய சொல் அமிழ்தம் என்போம்' என்று யாவரையும் உட்படுத்தி அழைக்கின்றார் பாரதிப் பெருமகன்.

இச் சுவடிகள் சிறு பருவம் தொட்டே கற்பிக்கத் தக்கன என்று எண்ணிய ஆறுமுகநாவலர் கீழ் வகுப்புக்களில் இவற்றைச் செய்யுட் பாடநூலாக அமைத்தார். அதனால் சிறு நூலாயினும் ஒருநூலை முழுதும் கற்றல், பிரித்தும் புணர்த்தும் பயிலல், அருஞ் சொற்பொருள் அறிதல், யாப்பு மனம் பெறுதல், வரப்பண்ணி ஒப்பித்தல் முதலான பல மொழிக் கூறுகள் ஈரத்தடம்போலக் குழந்தைகள் அறிவில் பதியலாயின. நம் முன்னோர்கள் திண்ணைப் பள்ளிகளில் இச்சிறு முதுநூல்களை முறையாகப் பயின்று குன்றாத் தமிழொலியும் குறையாத் தமிழறிவும் வளமான தமிழடிப்படையும் வாய்த்திருந்தனர். முதுமையிலும் இளங்கல்வியை நினைந்து

நினைந்து வாழ்ந்தனர். இத்தொல் மரபுப்படி ஏழிளந் தமிழ் மீண்டும் தொடக்கப் பள்ளியில் முழுநூலாக இடம்பெறுவதாகுக. பெற்ருல், இலக்கிய அளவிலே இயல் பான இலக்கணத்தினை நம் சிறுர்கள் பெற்றுவிடுவர். மொழித்திறம் ஊற்றுப்போல் பத்து வயதிற்குள் படிந்து விடும். மருத்துவம் கற்கும் மாணவர்கள் உலகத்து உடல்களை யெல்லாம் அறுத்துப் பழகிப் பார்ப்பதில்லையே. யாரும் அங்ஙனம் அறுவை செய்து காட்டுவதில்லையே. சில உடல் களில் மெய்யிலக்கணங்களைக் கற்றுக்கொள்ப ஒருசில எடுத்துக்காட்டுக்களில் உண்மையறிதலே அறிவியல் முறை. அதுபோலத்தான் மொழியுடலும். சில இலக்கணங்கள் தாம் எல்லாச் செய்யுட்களிலும் பரவிக்கிடக்கின்றன. ஒவ்வொரு பாட்டுக்கும் தனிப் புணர்ச்சிவிதியும் பிரிவு விதியும் இல்லை. ஒவ்வொரு பாடலுக்கும் தனி எழுத்து அசை சீர் அடி தொடைகள் இல. மொழிக்கும் அறிவியல் முறை உண்டு. ஏழிளந்தமிழ் ஒழுங்காகக் கற்பிக்கப் பட்டால், முன்னேற்றம் என்ற பெயரால் ஒவ்வொரு செய்யுளையும் மரங்கொல் தச்சன்போலப் பிரித்துப் பதிக்கும் வேதனையும், கேவலம் ஒரு நூலைப் பிரித்துப் பதித்து இரு கூருக்கும் போலிச் சாதனையும் ஒழிந்து மாயும் என்பதும், உண்மையான தமிழ் வேலி வளரும் என்பதும் என் துணிபு.

---

## மணிவாசகர் நூலகத்தின்
## சிறந்த நூல்கள்

**வ. சுப. மாணிக்கம்**

| | | |
|---|---|---|
| கம்பர் | 4 | 00 |
| இலக்கிய விளக்கம் | 3 | 50 |
| உப்பங்கழி | 4 | 50 |
| ஒரு நொடியில் | 4 | 50 |

**கி. வா. ஜகந்நாதன்**

| | | |
|---|---|---|
| கவி பாடலாம் | 6 | 00 |
| வீரர் உலகம் | 3 | 50 |

**ஜி. சுப்பிரமணிய பிள்ளை**

| | | |
|---|---|---|
| மாணிக்க விருந்து | 7 | 50 |
| திருநாவுக்கரசரும், மாணிக்க வாசகரும் | 3 | 50 |
| கம்பர் விருந்து | 3 | 50 |

**ப. கோதண்டராமன்**

| | | |
|---|---|---|
| இலக்கியத் திறனாய்வு | 7 | 00 |
| உலகப் பெருங்கவிஞர்கள் | 4 | 50 |

**இரா. சாரங்கபாணி**

| | | |
|---|---|---|
| பரிபாடல் திறன் | 6 | 00 |

**மு. வை. அரவிந்தன்**

| | | |
|---|---|---|
| உரையாசிரியர்கள் | 15 | 00 |

**சோம. இளவரசு**

| | | |
|---|---|---|
| இருபது நூற்றாண்டுகளில் தமிழ் | 3 | 00 |
| திருவருணைக் கலம்பகம் - உரை | 3 | 50 |

**ச. மெய்யப்பன்**

| | | |
|---|---|---|
| மும்மணிகள் | 3 | 50 |

